விதூஷகன்—(ரகஸியமாக) இப்பொழுது எதாவதொரு கற்பனையைச் செய்து தானாகவேண்டும். வேறு என்ன? சுரங்கம் செய்கையில் கையும் மெய்யுமாகப் பிடிபட்ட கள்ளனுக்கு, "நான் களவாட வரவில்லை. சுவரைத்துளைக்குந் தொழிலைப் பழகிப் பார்க்கின்றேன்" எனச் சொல்வது தான் வழி.

அரசி—காரிகையே, எனக்கு மாளவிகையாலாகவேண்டியது ஒன்றுமில்லை. நீ இங்கு வர நீட்டித்தபடியால், இடையில் ஒருவாறு மனத்தை மகிழ்விக்க இவ்வாறு விளையாடிக் கொண்டிருந்தேன்.

இராவதி—இவ்வாறு ஒரு விநோதப்பொருள் தங்களுக்குக் கிடைத்திருப்பது எனக்குத் தெரியாது. தெரிந்திருந்தால், தாங்கள் வருந்தும்படி இங்கு வந்திருக்கவே மாட்டேன்.

விதூஷகன்—அப்படியல்ல. மேன்மை தங்கிய அரசர், எல்லாரிடமும் தாக்ஷிண்யமுள்ளவர். அத்தகைய தாக்ஷிண்ய

---

பொருள் படுத்துக. ப்ரணய பதத்திற்கு வேண்டுகோள் என்ற பொருளுமுண்டு. எனவே, "பிரபுவின் வேண்டுகோளை எற்க நாங்கள் யாவர்?" என்றும் மொழி பெயர்க்கலாம். முன் வாக்கியத்தைப் பார்க்கையில் இதுவே சிறந்ததெனத் தோன்றுகிறது.

கற்பனையை— "லோப்த்ரேண க்ருஹீதஸ்ய கும்பீலகஸ்ய அஸ்தி வா ப்ரதிவசனம்" என்ற விக்ரமோர்வசீயம் இங்கு நினைக்கற்பாலது. இந்தக் கற்பனையின் தன்மையை உவமை மூலமாக விதூஷகன் உணர்த்துகின்றான்.

காரிகையே— "அழகிற் சிறந்த நீ இருக்க வேறு ஒருவனை நான் விரும்புவேனோ" என்ற கருத்துப்பட "காரிகையே" என்றான் அரசன். விதூஷகன் குறிப்பிட்ட வழியையே பின்பற்றி அரசன் ஒரு கற்பனை செய்து கூறுகின்றான். அரசன் கூறிய இந்த வார்த்தை உண்மையிலும் பொருந்தியதே.

அப்படியல்ல— "மா தாவத் தத்ரபவதி தத்ரபவதோ தாக்ஷிண்யஸ்ய உபரோதம் பணது. ஸமாபத்தித்ருஷ்டேந தேவ்யா: பரிஜநேஷு

த்தை எதிர்த்து நீங்கள் பேசுவது தகாது. தேவியாருடைய பரிஜனங்களைத் தற்செயலாகக் காணநேரிட்டபொழுதும் அவர்களோடு விநோதமாகப் பேசுவது பெரிய பிழை என்றால், (வேறு என்ன சொல்லக் கிடக்கின்றது) அதனைப்பற்றி நீங்களே ஆலோசித்துப் பார்க்கவேண்டும்.

இராவதி— அப்படியா? விளையாட்டுப் பேச்சு நடக்கட்டும், நான் ஏன் என் மனத்தை வீணில் வருத்தவேண்டும்?

(கோபத்துடன் புறப்படத் தொடங்கினாள்.)

அரசன்—(பின் தொடர்ந்து) உனது மனம் தெளியுமாக.

(இராவதி, தனது மேகலை அரையிலிருந்து கழன்று கால்களைச் சுற்றிக்கொள்ள, அதனையும் புறக்கணித்துக்கொண்டு செல்கின்றாள்.)

அரசன்— காரிகையே, வேண்டியவனிடம் இவ்வாறு வெறுப்பைக் காட்டுவது அழகாகாது.

---

ஸங்கதாபி யதி அபராத: ஸ்தாப்யதே, அத்ர த்வமேவ ப்ரமாணம்." என்பது மூலம். தேவியாருடைய பரிஜனங்களைக்கண்டால் பேசாமல் போவது, தேவியாரையே அவமதித்ததாகாதா?. ஆகையால் பேச நேரிட்டது. மேலும், அரசர் எல்லாரிடமும் தாக்ஷிண்ய (மற்றவர்களினிஷ்டப்படி நடப்பது) முள்ளவர். யாருடைய மனமும் நோகுமாறு அவர் நடக்கமாட்டார். அவ்வாறுள்ள அரசர் தேவியாரின் வேலைக்காரிகளுடன் தாக்ஷிண்யங்கொண்டு பேசுவதை நீங்கள் ஆக்ஷேபிப்பது, அவருடைய தாக்ஷிண்யத்தையே எதிர்த்துப் பேசுவதாகும். இஃது ஏற்றதல்ல என்பதை நீங்களே ஆராய்ந்து பாருங்கள்" என்பது வெளிக்கருத்தாம். தாக்ஷிண்யம்—தக்ஷிணநாயகனுயிருக்குந் தன்மை. பல மனைவிகளிடமும் ஒரே மாதிரியாயிருப்பவன் தக்ஷிணநாயகனாவான். "தாரிணிதேவியார் இருக்க, அவருடைய பரிஜனமானமான உன்னைக் கைக்கொண்டு பரிவுடன் நடத்துவதற்கு அரசருடைய தாக்ஷிண்ய ஸ்வபாவமன்றோ காரணம். அத்தகைய தாக்ஷிண்யம் இங்கும் ஏன் ஏற்படலாகாது?. அரசர் தமது தாக்ஷிண்யத்தை விடுவதாயிருந்தால் உனது நிலையும் எவ்வாறாகும்?. தேவியாரின் பரிஜனங்களோடு பேசுவது குற்றமாமெனில், உன்னோடு பேசுவதும் குற்றமேயாம். இவை யாவற்றையும் நீயே ஆராய்ந்து நோக்குக" என்ற உட்கருத்தை இங்கு விதூஷகன் தொனிப்பிக்கின்றான்.

காரிகையே.—"ப்ரணயிஜநே" என்பது மூலம். ப்ரணயி பதத்திற்கு அன்பன், வேண்டுவோன் என்று இருபொருள்கள் உண்டு. இங்கு இரண்டும் பொருந்தும்.

**இராவதி**— ஏ வஞ்சக, உமது மனப்போக்கை நம்பலாகாது.

**அரசன்**— ஏ காதற்கிளியே, நீ பலபோழுதும் என்னைச் சடன் என்று கூறுவது வழக்கமாகையால், இப்போழுதும் என்னை அவ்வாறு கூறி இகழலாம். கோபங் கோண்டவளே, உனது மேகலை உன் காலில் விழுந்து வேண்டிக் கோண்டும், நீ அதனையும் பாராட்டாது அந்த அவமதியைக் கைவிடவில்லையே?

**இராவதி**— இந்தப் பாழும் மேகலையும் உம்மையேயன்றோ பின்பற்றுகின்றது.

(மேகலையைக் கையிலெடுத்து அதனுல் அரசனை அடிக்க எண்ணுகின்றள்.)

---

**காதற்கிளியே.**—"மயி தாவதஸ்து தே பரிசயவத்யவதீரணு ப்ரியே', என்பது மூலம். "கூடவிப்ரியக்ருத் சட:" என்பது சட(ஶഠ)னது லக்ஷணம். ரகஸியமாக அப்ரியத்தைச் செய்பவன் சடனெனப்படுவான். "பரிசயவதீ" என்று பதம் பிரித்து, இதனை அவதீரணு என்பதற்கு அடைமொழியாக்கி நாம் மொழிபெயர்த்தோம். சிலர் "பரிசயவதி" என்று பிரித்து, இதனையும் ப்ரியே என்பதையும் மயிஎன்பதற்கு அடைமொழிகளாக்கி, "பரிசய முள்ளவனும் ப்ரியனுமான என்னிடம் உனக்குச் சடன் என அவமதிப்பு உண்டாகலாம்" என்று பொருள் கூறி, "அதிகம் பரிசயமேற்பட்டால் அங்கு அவமதிப்பும் உண்டாகும் என்ற உலகவழக்கை அனுஸரித்து இவ்வாறு கூறியதாம்." என்று கருத்தும் எழுதுகின்றனர். காலில்விழுந்தாலும் வேண்டிக்கொண்டாலும் கோபத்தைவிட வேண்டுமன்றோ. உன்னைச்சேர்ந்த மேகலையே (அரைஞாண்) காலில் விழுந்தும், என்னிடத்தில் கோபங்கொள்ளா திருக்குமாறு வேண்டிக்கொண்டும், நீ இன்னமும் என்மீது கோபத்தாலுள்ள அவமதிப்பை விடலாகாதா என்கிறுன் அரசன். மேகலை நழுவிக் காலில் விழுந்ததை, அது நமஸ்கரிப்பதாகவும், விழும்போதுண்டாகும் ஒலியை அதன் வேண்டுகோள் மொழியாகவும் பாவித்து இவ்வாறு நயமாக உரைக்கின்றுன் அரசன்.

**இந்த.**—"இயமபி ஹதாசா த்வாமேவ அநுஸரதி" என்பது மூலம். என்காலைக் கட்டிக்கொண்டு போகமுடியாமல் தடுத்து உமக்கே உபகாரம் செய்கின்றதே இந்த மேகலை என்கிறுள். நிலையிலிருந்து நழுவிய பின் காலைப் பிடித்துக்கொள்ளும் உம்மை ஒத்திருக்கின்றது இம்மேகலை என்றுள் இராவதி எனவுமாம். உம்மைப்போலவே இம்மேகலையும் எனக்கு அப்ரியத்தைச் செய்கின்றது என்கிறுளெனக் கொள்ளலுமாம்.

*அரசன்*— *நண்ப, இந்த இராவதியோ,*

கோபங்கொண்டவளாய், நடக்கும்போது நிதம்பத்தினின்று நழுவிய தங்க மேகலையைக் கையிலெடுத்துக் கண்ணீர் பெருக அம்மேகலையால் குற்றம் இழைத்த என்னை, கார்நிரை மழைபெய்து விந்தியமலையை மின்னற்கொடியால் தாக்குவதையொப்பத் தாக்கத் தொடங்குகின்றாள்.

**இராவதி**—என்னை ஏன் மேலும் குற்றமுள்ளவளாக்குகின்றீர்?

(மேகலையைக் கையிலேயே வைத்துக்கொள்கின்றாள்.)

*அரசன்*— ஏ சுரி குழலி, குற்றம் புரிந்த எனக்குச் செய்வதாயிருந்த தண்டனையை ஏன் நிறுத்திவிட்டாய். இவ்விஷயத்தில் ஒருபுறம் விலாஸத்தை வளர்க்கின்றாய், மறுபுறம் அடியனிடம் கோபத்தைக் காட்டுகின்றாய்.

---

கோபங்கொண்ட.—"*அவ்யபேக்ஷாச்யுதேந*" என்பது மூலம். அவ்யபேக்ஷையாவது—அபேக்ஷையில்லாமை—அநாதரம். கோபத்தால் அநாதரத்துடன் நடக்கும்போது நழுவிய என்பது பொருள். "*சண்டம்*" என்ற வடசொல்லுக்குக்கொடுமையுள்ளவன் என்பதுபொருள். இங்குக் குற்றம்புரிவோன் என்பது பொருள். "மேகராஜீவ விந்த்யம்" என்பது மூலம். இராவதிக்கு உபமானமாகக் கூறுகையில் பெண்பாலாயிருக்க வேண்டியதை உத்தேசித்து "*ராஜீ*" பதத்தையும் கவி சேர்த்துக் கொண்டார்.

என்னை.—"*கிம் மாம் பூயோபி அபராத்தாம் கரோஷி*" என்பது மூலம். இராவதி அடிக்க விரும்பினாள். அரசன் இதனையே புகழ்ந்து வர்ணித்தான். இராவதியின் கோபமும் சிறிது தணிந்திருக்கவேண்டும். இப்பொழுது இராவதி சிறிது பணிந்தே பேசுகின்றாள். "நான் அடிக்கவில்லை. இவ்வாறு பேசி எனக்குக் கோபத்தை உண்டுபண்ணி, அடிக்கும்படி தூண்டி என் வீணில் என்னை பிழை செய்தவளாக்குகின்றீர்" என்பது கருத்து. அல்லது, "நான் வந்ததே பிழையன்றோ. உம்மை அடித்து, மற்றொரு பிழையையும் ஏற்கவேண்டுமோ" என்று கடிந்து பேசுகின்றாளெனக் கொள்ளலுமாம். "நான் அடிக்க முயலாதிருக்க, அடிக்க முயலுவதாகக் கூறி என் என்மீது குற்றம் சுமத்துகின்றீர்" என்று ஒருவர் கருத்து எழுதுகின்றார். இவர் மூலத்திலுள்ள 'பூயோபி' என்பதைச் சிந்தித்தாரில்லை.

சுரிகுழலி.—"குடிலகேசி" என்பதற்குச் சுருண்ட கூந்தலுடையவள் என்பது பொருள். "*வர்த்தயஸி விலஸிதம் த்வம் தாஸஜநாயாத்ர*

(மனத்துள்) இப்போது அனுமதிபெற்றது இதுவே.

(கால்களில் விழுகின்றான்.)

---

குப்யஸி ச" என்பது மூலம். இங்கு "ச" என்ற பதம் இரண்டு காரியங்களுக்கும் உள்ள விரோதத்தைக் காட்டுகின்றது. "காதலனைக் காணுதல் முதலிய நிகழும்பொழுது, நிற்கையிலும் இருக்கையிலும் நடக்கையிலும் முகத்திலும் கண்களிலும் உண்டாகும் அழகிய மாறுபாட்டினை விலாஸமெனக் கூறுவர்" என்பது ரஸசாஸ்திரம். இப்பொழுது இராவதிக்குக் கோபத்தால் உண்டான இவ்வித மாறுபாட்டை அன்பினால் உண்டாகும் மாறுபாடாகச்சொல்லி, இராவதியின் கோபத்தைக்குறைக்கப் பார்க்கின்றான் அரசன். அன்பின் குறியான விலாஸம் பெரிதும் உன்னிடம் விளங்கி நிற்க, நீ அதற்கு மாறாகக் கோபத்தைக் காட்டலாமா என்கிறான். உன்னிடம் காணும் கோபக்குறியே விலாஸமென்னும் சிருங்கார சேஷ்டையாகத் தோன்றுகின்றது என்கிறானெனக் கொள்ளலுமாம்.

மனத்துள்.—"நூநம் இதம் அநுஜ்ஞாதம்" என்பது மூலம். "ஆத்மகதம் = மனத்துள்" என்பது சில புஸ்தகங்களில் கிடையாது. அப்பொழுது இது வெளிப்படையான பேச்சாகும். "திண்ணம். இஃது அனுமதிக்கப்பட்டது" என்பது நேரான பதப்பொருள். இத்தகைய ஸந்தர்ப்பத்தில் ஈர்ஷ்யாமானத்தைப் போக்கக் காலில் விழுவதைத் தான் ரஸநூலாசிரியர் தக்க உபாயமாகக் கூறியிருக்கின்றனர். ஆகையால் அவ்வாறே நான் செய்யவேண்டும் என்று அரசன் மனத்துள் நினைக்கின்றான். "இஃது" என்பது, தான் செய்யப்போகும் காலில் விழுதலைச் சுட்டியது. அனுமதிக்கப்பட்டது என்பதற்கு ரஸிகர்களால் கூறப்பட்டிருக்கின்றது என்பது கருத்து. இக்கருத்துடன் நாம் மொழிபெயர்த்தோம். "இஃது" என்றால் மேகலையால் அடிக்க ஓங்கிய கையை அடிக்காமல் திருப்புதலாம். என்னுடைய பிரார்த்தனையை அங்கீகரித்து என்னை அடிக்காமல், இராவதி, மேகலையைத் திருப்ப அனுமதித்தாள்" என்று காடயவேமன் கருத்துஎழுதுகின்றான். "இஃது" என்பது கோபம் முதலியதாம். கோபம் முதலியது கலவியின்பொருட்டு அனுமதிக்கப்பட்டது என்பது கருத்து" என்று ஒருவரினுரை! "இஃது" என்பது காலில் விழுவதாம். இராவதி, தடுக்காமலிருப்பதால், நான் காலில்விழுவதை அவள் அனுமதித்தாள் என்பதுகருத்து" என்று மற்றொருவரின் உரை!! ஸ்ரீ காளிதாஸருடைய இச் சிறுவாக்கியத்தின் மஹிமையை எவ்வாறு புகழ்வது.

**இராவதி**—இவை, உமக்கு ஸ்பரிசம் என்னும் தோஹதத்தை நிறைவேற்றும் மாளவிகையின் கால்களல்லவே.

[சேடியுடன் செல்கின்றாள்.

**விதூஷகன்**— எழுந்திருங்கள். அருள் கிடைத்துவிட்டது.

**அரசன்**— (எழுந்து, இராவதியைக் காணுமல்) ஓ. ஹோ, காதலி சென்று விட்டாளா ?

**விதூஷகன்**— நண்ப, இங்கு நிகழ்ந்த பிழைக்கு உரிய தண்டனையைத் தெய்வம் தடுத்திருக்கின்றது. இது நமது பாக்கியமே. ஒரு ஸமயம் செவ்வாயைப் போல இராவதியும் போனவழியில் திரும்பி வரக்கூடும். நாம் விரைந்து ஓடிவிடுவோம்.

**அரசன்**— என்னே! மன்மதனது மாறுபாடுள்ள போக்கு.

---

இவை.—இந்தப் பேச்சு இந்த ஸந்தர்ப்பத்தில் வெகு அழகாய்ப் பொருந்தியது. கோபங்கொண்ட இராவதி, 'தாங்கள்' என்றோ 'நீ' என்றோ பேசாமல் நடுநிலையில் நீர் என்று பேசுகின்றாள்.

எழுந்திருங்கள்.—தேவதையை வணங்கினீர்கள். அந்தத் தேவதை அனுக்கிரகம் செய்துவிட்டது என்று பரிஹஸிக்கின்றான். இராவதி இங்கிருந்து நீங்கியதே அவள் செய்யக்கூடிய பேருள் என்று விதூஷகன் பேசுகின்றான்.

நண்ப.—தாங்கள் மாளவிகையிடம் பேசியபிழைக்கு வெகு கடுமையான தண்டனையைத் தங்களுக்கும் எனக்கும் இராவதி விதிப்பாள் என்று எண்ணியிருந்தேன். அவ்வாறு நேராதது தெய்வானுக்கிரகமே என்கிறான். இராவதியின் தன்மையை ஓர்ந்து, அவளை க்ரூரபாபக்ரஹமான செவ்வாயோடு ஒப்பிடுகிறான் விதூஷகன். செவ்வாய்க்கு வக்ரகதி உண்டு. வக்ரகதியாவது—கிரமமாக ராசிவிட்டு ராசி சென்றுகொண்டிருக்கையில் சிலசமயம் மேல்ராசிக்குப்போகாமல் முன்விட்ட ராசிக்கே திரும்பிவருதலாம். இப்படி வக்ரகதியில் வந்தால் கெட்ட பலனுண்டாகும் என்பது சோதிட சாஸ்திரக்கொள்கை. கோபம் தணியாமல் நம்மைத் துன்பப்படுத்தக் கருதி மறுபடியும் இராவதி மடங்கிவருவாளேயாகில் நமக்குப் பெரிய அனர்த்தந்தான் என்கிறான்.

இப்போழுது மாளவிகைக்கு மனத்தைப் பறிகொடுத்து நிற்கும் நான், இராவதியின் அடிகளில் பணிந்தும் அவள் இதனைப் பாராட்டாது சென்றதை, அவள் எனக்குச் செய்த ஒரு பணிவிடையாகவே எண்ணுகின்றேன். அவள் இவ்வாறு என்னிடம் அன்புள்ளவளாயினும் இங்குக் காட்டிய கோபச் செய்கையை முன்னிட்டுச், சிறிது காலம் நானும் அவளிடம் உபேக்ஷை காட்டலாமன்றோ.

[எல்லாரும் செல்கின்றனர்.

மூன்றும் அங்கம் முற்றிற்று.

---

இப்போழுது.—"முன்பு இராவதியைவிட்டுப் பிரிவது எனக்குத் துன்பமாயிருந்தது. ஊடலில் நான் காலில் விழுந்தும் அவள் அதனைப் புறக்கணித்தால் என்மனம் அச்சமுற்றுத் தவிக்கும். இப்பொழுதோ என்மனம் மாளவிகையிடம் சென்றுவிட்டது. இராவதியைப் பார்ப்பதும் எனக்குத் துன்பமாயிருக்கின்றது. அவளிடம் செல்லாதிருப்பதற்குத் தக்கவழி இதுவரை கிடைக்கவில்லை. இப்பொழுதோ, என்னைப் புறக்கணித்ததையே காரணமாகக்கொண்டு சிறிதுகாலம் அவளை உபேக்ஷித்திருக்கமுடியும். எனவே, முன்பு பிரியமாயிருந்த வஸ்துவில் இப்பொழுது ஓர் அருசியை உண்டாக்கியிருக்கின்றான் மன்மதன். மன்மதனது இத்தகைய முன்பின் முரண்பாடுள்ள மாறுபாட்டை என்னென்று நான் சொல்வேன் என்கிறான் அரசன். "மன்யே...ப்ரணிபாதலங்கனம் ஸேவாம்" என்பதுமூலம். அரசன், தன்னை இராவதி புறக்கணித்ததை அவள் தனக்குச் செய்த உபகாரமாகக் கருதுகின்றான். "ஏவம் ப்ரணயவதீ ஸா மயி சக்யமுபேக்ஷிதும் குபிதா" என்பது மூலம். "ஏவம் குபிதா—இவ்வாறு கோபங்கொண்டவளான" என்றும் கூறலாம். "ஏவம் உபேக்ஷிதும்—இவ்வாறு உபேக்ஷிக்க—புறக்கணித்ததையே காரணமாகக் கொண்டு உபேக்ஷை செய்ய" என்பது காடயவேமனின் உரை. நமது மொழிபெயர்ப்பில் இக்கருத்தையும் காணலாம். இங்கு மூலத்தில் வேறு பாடங்களை அங்கீகரித்துச் சிலர் வேறு கருத்துக்களைக் கூறுவர். அவை சிறந்தவை அல்லவென விடுத்தோம்.

மூன்றும் அங்கம் முற்றிற்று.

# நான்காம அங்கம.



(பிறந்த காதலும் கவலையுங்கொண்ட அரசனும் வாயிற்காப்பவளும் பிரவேசிக்கின்றனர்.)

*அரசன்*— (மனத்துள்) நான் அந்த மாளவிகையைப் பற்றிக் கேள்வியுற்றபொழுது, மன்மதன் ஆகிய மரம், ஆசையாகிய வேரை ஊன்றியது. அவளை நேரில் கண்டஸமயம், ராகமாகிய தளிரை வெளிப்படுத்தியது. அவளைக் கையால் தொட்டபொழுது மயிர்க்கூச்சாகிய மொட்டுக் கட்டியது. இவ்வாறுள்ள அம் மரம், வாட்டம் அடைந்த என்னைப் பலத்தின் சுவையறியச் செய்யுமா ?

(வெளிப்படையாக) நண்ப கௌதம,

---

நான்.—சித்திரத்தில்கண்டு வினவியபொழுது, வஸுலக்ஷ்மி "மாளவிகை" என்று சொல்லக்கேட்டதும் அவளைப் பார்க்கவேண்டும் என்று அரசனுக்குப் பெரிய அவா உண்டாயிற்று. இதுதான் ஆணிவேர். "அழகிய உருவங்களில் ஆதரம் இடம் பெறுமன்றோ" என்று கௌமுதிகை பேசியபடி முதன்முதலில் ஏற்பட்ட ஆதரம், முறையே "இவளைக் கண்டு களிக்கவேண்டும்" என்று நினைக்கும்படி போரவலாக மாறியது. இவ்வாவல் முற்றிக் காதலாகி, நாட்டியஸமயத்தில் அவளைக் காணவே தளிர்த்தது. அடிபணிந்த அவளைக் கையாலெடுத்து அணைத்தபொழுது மயிர்ச்சிலிர்ப்பு என்னும் ஸாத்துவிகபாவம் (விறல்) வழியாக அக்காதல் நன்கு வெளிப்பட்டது. இவை யாவும் பூர்வாங்கங்களாம். மரம் நட்டு வளர்ப்பவன், அது வேரூன்றுவதையும் தளிர்ப்பதையும் அரும்புவதையும் கண்டு மகிழ்வானாயினும், அம்மரம் காய்த்து, அக்காய் பழுத்து அப்பழத்தைச் சுவைத்தபின்னரே அவன் தன்னைக் கிருதார்த்தனாக நினைத்துப் பூர்ணஸந்தோஷத்தை அடைவான் என்பதும், தான்பட்ட சிரமத்தை அப்பொழுதே மறப்பான் என்பதும் உலகநடையன்றோ. அவ்வாறே இங்கும் மன்மதவிருக்ஷத்தைப் பற்றிப் பேசப்படுகிறது. "மனஸிஜதரு." என்பதால் அம்மன்மதன் என்றமரமும் அரசனால் தன்மனத்தில் நட்டு வளர்க்கப்பட்டது என்பது பெறும். இம்மரம் இவ்வளவு தூரம் செழிப்புற்றிருப்பதால், பலத்தைக் கொடுத்து என்னைச் சுவைக்கும்படி செய்யக்கூடுமென்றுஎண்ணி, அதனையே எதிர்பார்த்து வேண்டுகின்றான் அரசன். சிருங்கார ரஸத்திற்கு (உவகைச்சுவை) ரதி, ("இரதி

**வாயிற்காப்பவள்**— பிரபுவே, ஓங்கி வாழ்க. கௌதமர் இங்கு இல்லையே.

**அரசன்**— (மனத்துள்) ஓ. மாளவிகையின் செய்தியை அறிந்துவர அவனை அனுப்பியிருக்கின்றேனல்லவா ?

---

யென்பதன்பொருளாகும்.") ஸ்தாயிபாவ (நிலைக்கருத்து) மாகும். இந்த ரதி மேன்மேலும் வளர்ந்து வெவ்வேறு பெயர்களைப் பெறுகின்றது. " அங்குர பல்லவ கலிகா ப்ரஸூந பலபோகபாகியம் க்ரமச:. ப்ரேமா மாந: ப்ரணய: ஸ்நேஹோ ராகோ z னுராக இதி" என்றும், "இயமங்குரிதா ப்ரேம்ணா மாநாத்பல்லவிதா பவேத். ஸகோரகா ப்ரணயத: ஸ்நேஹாத் குஸுமிதா பவேத். ராகாத் பலவதீ ஸேயம் அனுராகேண புஜ்யதே " என்றும் ரஸநூல் பேசும். "கீழ்க்கூறிய ரதி முளைத்தபோது அதற்கு "ப்ரேமம்" என்பது பெயர். அது, தளிர்த்தபோது "மானம்" எனப்படும். அரும்புங்கால் அது "ப்ரணயம்" ஆகின்றது. பூத்தக்கால் அதனை "ஸ்நேஹம்" என்பர். அது பழுத்தால் அதனை " ராகம் " எனக் கூறுவர். அது சுவைக்கப்படும் பொழுது "அனுராகம்" எனப்படும்" என்பது முற்கூறிய செய்யுட்களின் கருத்து. இங்கு "வேரூன்றியது" என்பதால் ரதியின் முதல் நிலையும், "தளிர்த்தது" என்பதால் இரண்டாம் நிலையும், "மொட்டுக் கட்டியது" என்பதால் மூன்றாம் நிலையும், இவ்வழியாக நான்காம் நிலையும், "பலத்தின் சுவை அறியச் செய்யுமா" என்பதால் ஐந்தாம் நிலையும் ஆறாம் நிலையும் கூறப் பட்டிருக்கின்றன எனக் கொள்க. ப்ரேமம் முதலியவற்றின் இலக்கணங்களை ரஸக்கிரந்தங்களில் விரிவாகக் காண்க. "ச்ரவணாத் தர்சனாத்வாபி" என்றார் ஆலங்காரிகர். தலைவனும் தலைவியும் ஒருவரையொருவர் கேட்டறிந்து காதலிப்பதுண்டு. ஒருவரையொருவர் நேரில் பார்த்துக் காதலிப்பதுமுண்டு. பெரும்பாலும் இரண்டாம் பக்ஷத்தை அனுஸரித்தே காவியங்களிலும் நாடகங்களிலும் காதலை வர்ணிப்பது வழக்கம். கேட்டுக் காதலித்தவர்—நளனும் தமயந்தியும், கண்ணனும் ருக்மிணியுமாவர். நம் காளிதாஸர், தம் நாடகங்களுடைய நாயகர்களை ஸ்ரீராமனுடைய நிலையில் வைத்தே எழுதுவது வழக்கம். இவ்விஷயத்தை விக்ரமோர்வசீயத்திலும் சாகுந்தளத்திலும் ஆராய்ந்துபார்த்தால் அறியலாம். இங்கோ அக்கினி மித்திரனை ஸ்ரீ கிருஷ்ணனுடைய நிலையில் நிறுத்திப்பார்க்கின்றார் மஹாகவி. ஆதலால்தான் கேட்டுக் காதலுற்றதாக எழுதுகின்றார். இக்கருத்தை ஐந்தாமங்கத்தில் "விரசிதபதம்.........ப்ரஸஹ்ய ச ருக்மிணீம்" என்ற செய்யுளில் நமது மஹாகவியே குறிப்பிட்டிருக்கின்றார். இவ்விஷயத்தை முகவுரையில் விரிவாக ஆராய்வோம்,

(பிரவேசித்து)

**விதூஷகன்**—பிரபுவே வாழ்க.

**அரசன்**—ஜயஸேனே, தாரிணி எங்கு இருக்கின்ருள்? அவள் தன்னுடைய கால்நோவு தெரியாதிருக்க எந்த விநோதச் செய்கையால் காலம் கழிக்கின்ருள்? அறிந்து வா.

**வாயிற்கா**—பிரபுவின் கட்டளைப்படியே.

[சென்றுள்.

**அரசன்**—கௌதம, மேன்மை பொருந்திய உன் தோழியின் செய்தி என்ன?

**விதூஷகன்**—பூனையால் பிடிக்கப்பட்ட பெண் குயிலின் செய்திதான்.

**அரசன்**—(வருத்தத்துடன்) எப்படி?

**விதூஷகன்**—அந்தச் செங்கண்ணுள், இரங்கற்குரிய மாளவிகையை நமன் வாயிலிட்டாற்போலச் சிறந்த கலன்களை வைக்கும் சுரங்கவீட்டில் அடைத்துவிட்டாள்.

**அரசன்**—என் ஸம்பந்தம் தெரிந்தல்லவா?

---

செங்கண்ணுள்.—"பிங்கலாக்ஷ்யா ஸாரபாண்ட பூமிக்ருஹகே" என்பது மூலம். "பிங்கல" என்பது கோரோசனையின் நிறத்தைச் சொல்லும். "பூனைக் கண்ணி" என்று இகழ்ந்து பரிஹாஸமாகப் பேசுகின்ருன் விதூஷகன் என்பர். கோபத்தால் கண் சிவந்திருப்பதை நினைத்து இவ்வாறு கூறினுன் என்பது வேறு சிலருடைய கருத்து. "ஸாரபாண்டம்" என்பதற்குச் சிறந்த பொருள்கள் என்பது பொருள். பூமிக்ருஹமாவது நிலத்தினுள் கட்டும் வீடாம். இதனைச் சுரங்கம் என்றும் நிலவறை என்றும் கூறுவர். இந்த இடத்தில்தான் விலையுள்ள பதார்த்தங்களை வைப்பது வழக்கம். ஸாரபாண்டம் என்ருல் சிறந்த மூலதனம் என்பது சிலரது உரை. எவ்வாருயினும் அந்தவிடம் சிறந்த பொருளாகிய மாளவிகையை வைக்கத் தகுந்ததே.

என்.—"நநு மத்ஸம்பர்க்கம் உபலப்ய" என்பது மூலம். "என் ஸம்பந்தம் பெற்றதினுல் தானு?—இந்தக் கஷ்டத்திற்குக் காரணம் நான் தானு" என்றும் கருத்துக் கூறுவர்.

**விதூஷகன்**—ஆம்.

**அரசன்**—கௌதம, இங்ஙனம் தேவி கோபிக்கும்படி அவளைத் தூண்ட, நம்மீது வெறுப்புள்ளவர் யார்?

**விதூஷகன்**—கேளுங்கள். பிக்குணி சொல்கின்றாள்—காலில் நோவுள்ள தேவியைக் கண்டு ஸௌக்கியம் வினவ, நேற்று இராவதி இங்கு வந்திருந்தாள்.

**அரசன்**—பிறகு பிறகு.

**விதூஷகன்**— அப்பொழுது "காதலரைக் கண்டனையா" என்று தேவி இராவதியை வினவினாள். அதற்கு "இந்த உபசாரவார்த்தை எதற்கு? வேண்டாம். காதல், பரிஜனங்களிடம் பாய்ந்திருப்பதைத் தாங்கள் அறியீர்களோ?" என்று இராவதி மறுமொழி கூறினாள்.

**அரசன்**—பெயரைக் குறிப்பிடாமல் பொதுவாகக் கூறினும், இந்தப் பேச்சு மாளவிகையைப் பற்றியே என்று எண்ணி என்மனம் நடுங்குகின்றது. பிறகு.

**விதூஷகன்**—பிறகு தேவி மிகவும் வற்புறுத்திக் கேட்கவே, இராவதி தங்களது அச்செய்கையை அவளிடம் தெரிவித்து விட்டாள்.

**அரசன்**—என்னே! இராவதியின் மாறாக் கோபம். அப்புறம் நடந்ததைச் சொல்.

---

அப்பொழுது.—"வல்லப ஜன:" என்பது வடசொல். உபசாரவார்த்தை—வெகுமதித்து மகிழ்வித்துப் பேசும்மொழி. வஸந்தோத்ஸவகாலத்தில் அரசனோடு இராவதி ஊசலாடியிருக்கலாமென்று நினைத்தும், முன்பு நாட்டியத்தில் தோற்றுப்போன இராவதிக்கும் அரசனுக்கும் இப்போது மனப்பொருத்தம் எவ்வாறிருக்கின்றது என்றறியக் கருதியுமே தாரிணி இராவதியை இவ்வாறு வினவினாள். "அரசரது அன்பு என்னையும் உன்னையும் விட்டு உனது வேலைக்காரியிடம் சென்று விட்டது. இதற்குக் காரணம் நீயன்றோ. உன் வேலைக்காரியை நீ அடக்கிவைக்காமையாலல்லவா இவ்வாறு நேர்ந்தது" எனக் குறிப்பாலுணர்த்துகின்றாள் இராவதி.

என்னே.—காலில் விழுந்து நான் வேண்டிக்கொள்ள, அதனையும்

**விதூஷகன்**—அப்புறம் என்ன? மாளவிகையும் வகுளாவலிகையும் விலங்கிடப்பட்டவர்களாய், நாககன்னிகைகளைப் போல ஸூரியகிரணமும் நுழையாத பாதாளத்தில் வஸித்துவருகின்றனர்.

**அரசன்**—அந்தோ, அந்தோ!

இனிய குரலுள்ள பெண்குயிலும் பெண்வண்டும், மலர்ந்த மாவில் அமர்ந்திருக்க, அப்பொழுது முன்பு சுழற்காற்றும் பின்பு தானுமாகத் திடீரெனத் தோன்றிய மழையொன்று, அவ்விரண்டனையும் வெருட்டித் துரத்தி மரத்தின் பொந்தினுட் புகுத்திவிட்டதே!

தோழ, இதனைப் பரிஹரிக்க ஏதாவதொரு வழிஉண்டோ?

**விதூஷகன்**—எப்படி இருக்கமுடியும்? தேவியார் அந்த நிலவறையில் காவல்புரியும் மாதவிகைக்கு "அடி, என்னுடைய முத்திரை மோதிரத்தைக் கண்டாலன்றி, பாழெண்ணங்கொண்ட இந்த மாளவிகையையும் வகுளாவலிகையையும் நீ வெளியில் விடலாகாது" என்று கட்டளையிட்டிருக்கின்றார்.

**அரசன்**—(பெருமூச்செறிந்து, கவலையுடன்) நண்ப, இனி நாம் செய்யலாவதி என்ன?

**விதூஷகன்**—(ஆலோசித்து) இங்கு ஓர் உபாயம் உளது.

**அரசன்**—அஃது எத்தன்மையது?

---

புறக்கணித்ததோடு நில்லாமல் தாரிணியையும் கலக்கிவிட்டாளே. இராவதியின் நீண்டகோபம் பொல்லாது என்கிறான் அரசன்.

இனிய.—" அகாலவ்ருஷ்ட்யா ப்ரபல புரோவாத்யயா " என்பது மூலம். மாமரம் பூக்கும் வஸந்தகாலத்தில் உண்டாகும் மழை அகாலவருஷமன்றோ. கோடைமழையின் கொடுமையும், அப்போதைய சூறைக்காற்றின் வலிமையும் நமக்கு அநுபவத்திலுள்ளனவன்றோ. இங்கு அலங்காரம் அப்ரஸ்துத ப்ரசம்ஸையாம். "ப்ரபல புரோவாதயா" என்ற பாடமுமுண்டு.

எப்படி.—"அங்குலீயகமுத்ராம்" என்பது மூலம். நாகமுத்திரையுள்ள மோதிரம் எனக் கூறுவர்.

**விதூஷகன்**— (நான்கு புறமும் பார்வையைச் செலுத்தி) யாராவது நமது கண்ணிற்படாமல் ஒளிந்திருந்து கேட்கக்கூடும். காதில் சொல்லுகின்றேன். (அணைத்து) இவ்வாறு.

**அரசன்**—நன்று. காரியம் கைகூடுமாறு இதனை இயற்றுக.

(பிரவேசித்து.)

**வாயிற்கா**—பிரபுவே, தேவியார் நல்ல காற்றுள்ள இடத்தில் படுக்கையில் சயனித்துக்கொண்டிருக்கின்றார். நோவுபடும் காலினைக் கையிலேந்திக்கொண்டு பரிஜனங்கள் அதற்குச் செஞ்சந்தனக் குழம்பு பூசுகின்றனர். பிக்குணியார் விநோதமாகப் பொழுதுபோகத் தேவியாருக்குக் கதைகளைச் சொல்லுகின்றார்.

**அரசன்**—நாம் அங்குச் செல்லத் தக்க ஸமயந்தான் இது.

**விதூஷகன்**—தோழ, தாங்கள் செல்லலாம். நானும் தேவியாரைப் பார்க்கவேண்டும். வெறும் கையாயில்லாமல் வருவேன்.

**அரசன்**—ஜயஸேனைக்கு முதலில் விஷயத்தைத் தெரிவித்துவிட்டுப் பிறகு போ.

**விதூஷகன்**— அவ்வாறே. (ஜயஸேனையின் காதில்) அம்மா, இவ்வாறு.

[செல்கின்றன்

---

நாம்.—இராவதி மூலம் விஷயங்களைத் தெரிந்துகொண்ட தாரிணிக்குக் கோபமிருந்தாலும், கௌசிகி கூடவிருப்பதால் தக்கபடிபேசிக் கோபத்தை ஆற்றக்கூடுமென்று அரசன் நினைக்கின்றான்.

தோழ—தேவியாரைப் பார்க்க எதாவதொரு கையுறையுடன் வருகிறேன் என்றான். "அரிக்தபாணி:" என்பது வடசொல். கையில் தாழைமுள்ளால் கீறிக்கொண்டு புண்ணுடன் வருகிறபடியால் "வெறும் கையாயில்லாமல் வருவேன்" என்று விதூஷகன் சொல்வதுண்மையே.

ஜயஸேனைக்கு.—மேலே நடக்கும் காரியங்களில் ஜயஸேனையின் உதவியும் வேண்டியிருப்பதால் முன்னதாகவே அவளுக்குத் தெரிவிக்கும்படி அரசன் கூறுகின்றான்.

**அரசன்**—ஜயஸேனே, தேவி சயனித்திருக்கும் காற்றுள்ள இடத்திற்குப் போகும் வழியைக் காட்டுக.

**வாயிற்கா**—பிரபு இவ்வழிவரவேண்டும், இவ்வழிவரவேண்டும்.

(பிறகு படுக்கையிலிருக்கும் அரசியும், பிக்ஷுணியும், நிலைமைக்குத் தக்கபடி பரிஜனங்களும் பிரவேசிக்கின்றனர்.)

**அரசி**—பகவதி, கதைப்போக்கு அழகாயிருக்கின்றது. பிறகு.

**பிக்குணி**—(பார்வையைச் செலுத்தி) இதற்குமேலுள்ள கதையைப் பின்னர்த்தெரிவிக்கின்றேன். மேன்மை பொருந்திய அரசர் அதோ வருகின்றார்.

**அரசி**—ஓ! அரசர்.

(எழுந்திருக்க முயல்கின்றாள்.)

**அரசன்**—முறைப்படி வழிபாடுசெலுத்த வருந்தவேண்டாம்.

இதுவரை சிலம்பணியாதிருக்கப் பழகாததும், தங்கப் பலகையால் தாங்கப்பெறுவதும், வேதனை பெரிதுமுள்ளதுமான உனது காலையும் என்னையும் நீ துன்புறச் செய்வது தகாது.

---

கதைப்போக்கு— "ரமணீயம் கதாவஸ்து" என்பது மூலம். நாட்டிய காலத்தில் தாரிணிக்குக் கௌசிகியிமீதிருந்த கோபம் தணிந்து கதை கேட்கும்படியான மனப்பான்மை வந்து விட்டதாக இங்குக் கூறி தாரிணியது ஸ்பாவத்தின் மேன்மையை மஹாகவி குறிப்பாலுணர்த்துகின்றார். இங்கு மஹாகவி தமது நாடகத்தின் சிறப்பினையும் தொனிப்பிக்கின்றாரெனக் கொள்க.

இதுவரை— அரசிக்குத் தன்மீது கோபம் பிறவாதிருக்க எவ்வளவு தந்திரமாக அரசன் உபசாரமொழி கூறுகின்றான். "அநுசிதநூபுரவிரஹம்" என்பது மூலம். உசிதபதத்திற்குப் பழகிய என்ற பொருளுமுண்டு. "சிலம்பணியாதிருக்கத் தகாதது" என்று சிலர் உரை எழுதுகின்றனர். "நீ எனக்கு உபசாரஞ் செய்யக் கருதி எழுந்தால் கால் நோவுபடும். அதனைக் கண்டு நான் நோவுபடுவேன்." என்றான் அரசன் "சிலம்பு அணியாதிருக்கும்" என்றும், "என்னையும் துன்புறச் செய்வது தகாது" என்றும் பேசும் அரசன், "உனது சிலம்பு அணியுமாறு உனது கருணைக்கும் பிரீதிக்கும் பாத்திரமான மாளவிகை விஷயத்தில் நான் நேசம் பாராட்டியது உன்னை வெகுமதிப்பதற்காகவே. ஆகை

**அரசி**—ஐயர் வாழ்க.

**பிக்குணி**—பிரபு ஓங்கி வளருக.

**அரசன்**—(பிக்குணியை வணங்கி, உட்கார்ந்து) தேவி, வேதனை பொறுக்கும்படி யிருக்கின்றதா?

**அரசி**—சிறிது மாறுதலுண்டு.

(பிறகு விதூஷகன், பெருவிரலைப் பூணூலால் கட்டிக்கொண்டு ஆற்றமையுடன் பிரவேசிக்கின்றன்.)

**விதூஷகன்**—பிரபுவே, காப்பாற்றுக. பாம்பு கமனுக வந்து என்னைக் கடித்துவிட்டது.

(எல்லாரும் வருத்தப்படுகின்றனர்.)

**அரசன்**—கஷ்டம். கஷ்டம். எங்குச் சுற்றித் திரிந்தாய்?

**விதூஷகன்**—முறைப்படி கையுறையுடன் தேவியாரைக் காணவேண்டுமெனக் கருதி பூப் பறிக்கப் பிரமதவனம் சென்றேன்.

---

யால் இராவதியின் வார்த்தையைக் கேட்டுக் கோபங்கொண்டு என்னை நீ வருத்தலாகாது" என்று குறிப்பாலுணர்த்துகின்றான் போலும்.

வேதனை— மாளவிகை விஷயமாக அரசியின் மனோவேதனையையும் அரசன் வினவினுனே?.

சிறிது— "அஸ்தி விசேஷ:" என்பது மூலம். அரசனுடைய வினுவுக்குத் தக்கபடி, மாளவிகையைச் சிறையிலடைத்தபடியால் இனி அவள் விஷயமாகக் கவலைப்படவேண்டியதில்லை என்று அரசியும் விடை அளிக்கின்றனளோ?

பிறகு— அரசனும் அரசியும் வேறு வார்த்தையைப் பேசவோ, மத்தியில் மாளவிகையின் விஷயம் வரவோ இடங்கொடாமல், மஹாகவி விதூஷகனை வரவழைக்கின்றார்.

பிரபுவே— நான்காம் அங்கம் முதற்செய்யுளில் அரசன் கூறியவாறு, விதூஷகனது சூழ்ச்சி என்னும் மரம், வேரூன்றித் தளிர்த்து மொட்டிட்டுப் பூத்து இப்பொழுது காய்க்கத் தொடங்குகின்றது.

கஷ்டம்— என்னே! அரசனது அழகிய வினு! இது, விதூஷகன் சொல்லவேண்டியதை எவ்வளவு நன்றாகத் தூண்டியெழுப்புகின்றது.

**அரசி**—ஐயோ, ஐயோ. பிராமணன் உயிருக்கு மன்றுட நானு காரணமானேன் ?

**விதூஷகன்**—அந்தப் பூங்காவில் அசோக மரத்திலுள்ள பூங்கொத்தைப் பறிக்கக் கையை நீட்டியபோது, நமன் பாம்புருவம் பூண்டு மரப்பொந்திலிருந்துகிளம்பி என்னைக் கடித்துவிட்டான். இதோ, பாருங்கள், இரண்டு பற்கள்பட்ட இடம்.

(காட்டுகின்றன்.)

**பிக்குணி**—அப்படியானல், கடித்த இடத்தை முறித்துவிட வேண்டும். முதலில் செய்யவேண்டிய காரியம் இதுதானென்று சொல்வார்கள்.

**அரசன்**—

கடித்த இடத்தை வெட்டல், தீய்த்தல், அவ்விடத்திலிருந்து ரத்தம் வடியச் செய்தல் ஆகிய இவைகள், கடிபட்டவனைப் பிழைப்பிக்க உடனேயே செய்யப்படவேண்டிய காரியங்களாம்.

ஆகையால் இப்பொழுது விஷவைத்தியர்கள்தாம் சிகித்ஸை செய்யவேண்டும். ஜயஸேனே, துருவஸித்தியைச் சீக்கிரம் அழைத்து வா.

---

ஐயோ— விதூஷகனைப் பாம்பு கடிக்கத் தானே காரணம் என்று உணர்ந்தால் மாத்திரமே, அரசி தனது முத்திரை மோதிரத்தைக் கொடுக்கக்கூடும் என்று நினைத்துச் செய்த சூழ்ச்சி பலிக்கத் தொடங்குகின்றது.

அப்படியானல்.—விதூஷகனது சூழ்ச்சியை அறியாத கௌசிகி, உண்மையில் செய்யவேண்டிய சிகித்ஸையைச் சொல்கின்றாள். இந்த வாக்கியமும் அரசனுடையதாகச் சில புஸ்தகங்களிற் காணப்படும் பாடம் நன்கு பொருந்தாது.

கடித்த.—விஷயமறியாத பிக்குணி அவ்வாறு சொல்லவே, அரசன் புத்திசாலித் தன்மையால் அக்காரியம் நடவாதபடி தடுக்கின்றான். உடனே செய்யவேண்டிய காரியங்களை இப்போது செய்யலாகாதென்கிறான். "த(ஊ)ஷ்டமாத்ராணும்" என்பது மூலம். "உண்மையில் கடிக்கப்பட்டவர்களுக்கு மாத்திரமே இம்மூன்று சிகித்ஸைகளும் செய்யத் .

வாயிற்கா—பிரபுவின் கட்டளைப்படி.

[சென்றாள்.

விதூஷகன்—ஐயோ, பாவி நமன் என்னைப் பிடித்துவிட்டானே.

அரசன்—பயப்படவேண்டாம். ஒரு ஸமயம் விஷம் பாயாதிருக்கும்படி கடித்திருக்கலாம்.

விதூஷகன்—நான் எப்படிப் பயப்படாதிருக்கமுடியும்? என் அங்கங்கள் சிலுசிலுக்கின்றனவே.

(விஷம் விரைவில் ஏறுவதின் குறிகளை வெளிக்காட்டுகின்றான்.)

அரசி—ஆ ஆ. அசுபக்குறி காணப்படுகின்றதே. பணிப்பெண்காள், கௌதமனைத் தாங்கிநிற்க.

---

தக்கன; பொய்சொல்லும் விதூஷகனுக்கு இவை ஏற்கா. ஆகையால் எங்களுடைய முன்னேற்பாட்டுப்படி இப்பொழுது விஷவைத்தியனை துருவவஸித்தியே தனது காரியத்தை நடத்தவேண்டும்” என்பது அரசனது உட்கருத்து. அரசி வேறு யாரையாவது அழைத்துவிடுவாளோ என்றும், அவ்வாறாயின் தனது முன்னேற்பாடு முழுவதும் சிதறுண்டு விடுமன்றோ என்றும் நினைத்து அரசன், துருவஸித்தியைக் கூட்டிவரும்படி தானே கட்டளையிடுகின்றான்.

ஐயோ.—என்னே! விதூஷகனது தந்திரம். அரசியின் மனத்தைக் கலக்கவே இவ்வாறு விதூஷகன் பேசுகின்றான்.

பயப்படவேண்டாம்.—“கடித்து விஷத்தை ஊற்றுவதற்கு முன் நீ விரலை இழுத்திருக்கக்கூடும். அப்பொழுது விஷம் இறங்காதிருக்கலாம்” என்று அரசன் தேற்றுகின்றான். “அவிஷோபி கதாசித் தம்சோ பவேத்” என்பது மூலம். “பாம்பு கடித்திருந்தாலல்லவா விஷம் பாய்ந்திருக்கக்கூடும். இப்பொழுது உனக்கு ஏற்பட்டிருக்கும் புண்ணோ பாம்பாலல்ல. விஷம் ஏது” என்பது அரசனது உட்கருத்து.

நான்.—அரசன் பரிஹாஸமாகச் சொன்ன உட்கருத்தை அறிந்துகொண்ட விதூஷகன், மற்றவர்களுக்கு இதிலிருந்து ஏதாவதொரு ஸந்தேஹம் பிறக்குமோ என்றஞ்சி, உண்மையில் பாம்புகடித்து விஷம் ஏறியதாக நடிக்கின்றான். “விமலிமாயந்தே மே அங்காணி” என்பது மூலம்.

ஆ ஆ.—கண் சுழலல் தலை தொங்கல் முதலியன அசுபக்குறிகளாம்.

(வேலைக்காரிகள் பிடித்துக்கொள்கின்றார்கள்.)

விதூஷகன்—(அரசனைப் பார்த்து) ஏ, சிறு வயதுமுதல் தங்களுக்குத் தோழனாயிருக்கின்றேன். ஆதலின், கிழவியான என் தாயின் யோகக்ஷேமங்களைத் தயங்காமல் நடத்துவீராக.

அரசன்—பயப்படாதே. சீக்கிரத்தில் விஷவைத்தியன் உனக்கு வைத்தியம் செய்வான். தைரியமாயிரு.

(பிரவேசித்து.)

ஜயஸேனை—பிரபுவே, கௌதமரைத் தன்னிடம் கொண்டுவரும்படி துருவஸித்தி சொல்லுகிறார்.

அரசன்—அப்படியானால், கௌதமனைத் தாங்கி மெல்ல அழைத்துக் கொண்டு போய்விடு.

ஜயஸேனை—அவ்வாறே.

விதூஷகன்—(அரசியைப் பார்த்து) தேவி, நான் பிழைப்பேனோ, பிழைக்கமாட்டேனோ. மேன்மையுள்ள அரசருடைய எண்ணத்திற்கு இணங்கி நான் தங்கள் விஷயத்தில் தவறிழைத்திருப்பேன், அதைத் தாங்கள் பொறுத்தருள வேண்டும்.

---

சிறுவயது.—கிடைக்காதது கிடைத்தல் யோகம்; கிடைத்ததைக் காத்தல் க்ஷேமமாம். "அவிசாரேண......வஹ" என்பது மூலம். "நான் போய்விட்டேன் என்று எண்ணி என் தாய் வருந்தாதபடி" என்று சிலர் உரை எழுதியிருக்கின்றனர். "தத் விசார்ய அபுத்ராயா:......வஹ" என்றும் பாடமுண்டு. அப்பொழுது "அதனை நினைத்து பிள்ளையற்ற என் தாயின்......" என்று மொழிபெயர்க்க வேண்டும்.

பயப்படாதே.— தைரியமாகவே முன் ஆலோசித்த காரியத்தை நிறைவேற்று என்று குறிப்பிடுகின்றான் போலும்.

அப்படியானால்.— என்னே! இவர்களின் தந்திரம். "தேஹி வர்ஷவரக்ருஹீதம்" என்ற பாடமுமுண்டு. வர்ஷவரன் = கஞ்சுகி. "கஞ்சுகி தாங்கிவர அழைத்துக்கொண்டு போ" என்பது பொருள்.

தேவி.—அரசியின் மனம் இளகுமாறு எவ்வளவு அழகாக விதூஷகன், இரக்கவார்த்தைகளைப் பேசுகின்றான். "மாளவிகை விஷயமாகத்

அரசி—நெடுநாள் வாழ்வாயாக.

[விதூஷகனும் வாயிற்காப்பவளும் செல்கின்றனர்.

அரசன்—ஐயோ பாவம். கௌதமன் பரமஸாது. பயந்த ஸ்வபாவமுடையவன். ஆகையால், உண்மைப் பெயருள்ள த்ருவஸித்தியைப் பற்றியும் ஐயப்படுகின்றான்.

(பிரவேசித்து.)

ஜயஸேனை—பிரபுவே வாழ்க. "தண்ணீர்க்குடம் வைத்து அதனுள் நாகமுத்திரையையிட்டுக் காரியம் நடத்தவேண்டும். ஆகையால் நாகமுத்திரையை வாங்கி வா" என்று த்ருவஸித்தி என்னிடம் சொல்லி அனுப்பியிருக்கின்றார்.

---

தான் செய்தது அரசாது நிர்ப்பந்தத்தாலேயே" என்று கூறி, விதூஷகன், இனித் தான் செய்யப்போகும் விஷயத்திலும் தன்மீது குற்றமில்லாமையைத் தெரிவித்து அரசியின் பொறுமையை வேண்டுகின்றான் போலும்.

நெடுநாள்.— இயற்கையாகவே மனநெகிழ்ச்சியுள்ள அரசி, இப்பொழுது மனமுடைந்து நிற்குங்கால் "நான் பிழைப்பேனோ பிழைக்கமாட்டேனோ" என்று விதூஷகன் கூறினனேயாகில் "நீ நீடூழிவாழ்வாயாக" என்று மொழிவதைத் தவிர, வேறு என்ன கூறுவாள்?

ஐயோ பாவம்.— "த்ருவஸித்தோபி யதார்த்தநாம்ந: ஸித்திம் ந மன்யதே" என்பது மூலம். த்ருவமான நிச்சயமுள்ள ஸித்தியை காரியஸித்தியை உடையவன் என்பது த்ருவஸித்திபதத்தின் பொருள். இவன் செய்யும் சிகித்ஸைகள் பயன்படுவனவாகையால், அந்தப் பதப்பொருள் இவனிடம் பொருந்தும் என்பது கருத்து. இங்குக் காணும் வேறு பாடங்களும் சிலரின் உரைகளும் சிறந்தவையல்ல என்று அவைகளை விடுத்தோம்.

பிரபுவே.—"உதகும்ப விதாநேந ஸர்ப்ப முத்ரிகா கல்பயிதவ்யா" என்பது மூலம். உதகசாந்தியில் குடம்வைத்து அதனுள் பணத்தைப் போட்டு ஜபம் செய்வதைப் பார்த்தவர்களுக்கு, இந்த உதகும்பவிதா(யா)நத்தின் மாதிரி புலப்படக்கூடியது. இங்கு விஷசிகித்ஸையாகையால் ஜலபூர்ணமான குடத்தினுள் ஸர்ப்பசின்னமுள்ள ஏதாவதொரு பொருளை இடவேண்டியதாயிற்று. ஸர்ப்பமுத்ரிகை என்றால் ஸர்ப்பத்தின் அடையாளம். அதாவது பாம்புருவம் போட்ட ஏதாவதொரு

**அரசி**—இந்தா, நாகமுத்திரையுள்ள மோதிரம். பிறகு என் கையிலேயே கொடுக்கவேண்டும்.

(கொடுக்கின்றாள்; ஜயஸேனை வாங்கிக்கொண்டதாக அபிநயிக்கின்றாள்.)

**அரசன்**—ஜயஸேனே, காரியம் பயன்பட்டவுடனேயே வந்து செய்தி தெரிவிக்கவேண்டும்.

**ஜயஸேனை**.—பிரபுவின் ஆணைப்படியே.

[சென்றாள்.

---

**பொருள்.** சிலர் ஸர்ப்பமுத்ரிகை என்பதற்குப் பாம்புருவம் அமைந்த மோதிரம் எனப் பொருள் கூறுவர். உதகும்பவிதியினுடையவும் ஸர்ப்ப முத்ராவிதியினுடையவும் ரீதி முதலியவற்றைப் பைரவி தந்திரத்திலும் ரஸாத்ணவவியிலும் விரிவாகக் காண்க.

**இந்தா.**—எவ்விதத்திலாவது விதூஷகன் பிழைக்க வேண்டுமென்று ஒரே கவலையுடனிருக்கும் அரசி, தனது உயர்ந்த மனத்துக்குத் தக்கபடி தன் கையிலிருந்த மோதிரத்தை உடனே கொடுத்துவிடுகின்றாள். நடுவில் மாளவிகை விஷயமும் நினைவிற்கு வருகிறது. ஆகையால், தன் கையிலேயே கொடுக்கவேண்டுமென்று சொல்லுகின்றாள். துருவஸித்தி ஜயஸேனை விதூஷகன் ஆகிய இம்மூவரும் இவ்வாறு ஒன்றுபட்டுச் சூழ்ச்சி செய்வார்கள் என்பதை அரசி எவ்வாறு ஊஹித்தறிய முடியும்.

**ஜயஸேனே.**—"கர்மஸித்தௌ ஆசு ப்ரதிபத்திம் ஆநய" என்பது மூலம். ப்ரதிபத்தியாவது ப்ரவ்ருத்தி—செய்யும் காரியம். இங்குச் செய்தி எனக்கொள்ளல் வேண்டும். "கா அத்ர ப்ரதிபத்தி:" என்று இம்மஹாகவியே வேறோரிடத்தில் கூறியிருக்கின்றார். விதூஷகனுக்குச் செய்யும் சிகித்ஸைக்காரியம் நிறைவேறிவிட்டால், உடனே வந்து இங்கு விஷயத்தைத் தெரிவிக்கவேண்டும் என்பது வெளிப்படையான கருத்து. "நமது தந்திரச் செய்கை பலித்துவிட்டால் காலம் தாழ்த்தாமல் உடனே வந்துசொல். பலித்துவிட்டால் மாத்திரமே என்னிடம் வந்து சொல். அரைகுறையாக வந்து சொல்லாதே" என்பது அரசனது உட்கருத்தாம். ப்ரதிபத்தி சப்தத்திற்கு "ப்ரயத்நம்" என்று ஒருவரும் "யோக்ய ஸ்தாநப்ராப்தி" என்று வேறொருவரும் பொருள் கூறுகின்றனர். "காரியம் நிறைவேறச் சீக்கிரமாகப் பிரயத்தினம் செய்" என்று முதல்வர் கருத்து எழுதுகின்றார்! "காரியம் நிறைவேறியபின்

பிக்குணி—பிரபுவே, கௌதமருடம்பில் விஷமில்லை என்றே என்மனத்திற்குத் தோன்றுகின்றது.

அரசன்—அவ்வாறே ஆவதாக.

(பிரவேசித்து)

ஜயஸேனை—பிரபுவே, ஆரிய கௌதமர் விஷவேகம் இறங்கிச் சிறிது நேரத்திற்குள்ளேயே இயற்கை நிலையை அடைந்து விட்டார்.

அரசி—ஸந்தோஷம். நல்ல வேளையாய் அபவாதத்தினின்று விடுபட்டேன்.

ஜயஸேனை—இது நிற்க. "அரசியல் விஷயமாக ஆலோசிக்க வேண்டிய காரியங்கள் நிரம்பவுமிருக்கின்றன. அது பற்றிக் கருணைகூர்ந்து காட்சி தந்தருளவேண்டும்" என்று மந்திரி வாஹதகர் தெரிவிக்கின்றார்.

அரசி—காரியங்களைச் செய்து முடிக்க ஐயர் போகலாமே.

---

மோதிரத்தைத் தேவியின் கையில் சேர்த்துவிடு" என்று இரண்டாமவர் கருத்துக் கூறுகின்றார் !!

பிரபுவே.—புத்திகூர்மை மிகவும் பொருந்திய பிக்குணி, இங்கு நடக்கும் காரியத்தின் போக்கையும், அரசனுடைய் முகக்குறி முதலியவற்றையும் உய்த்துப் பார்த்து உண்மையை ஒருவாறு ஊஹித்துவிட்டாள். தான் உண்மையை ஊஹித்தறிந்துவிட்டதாக இவ்வாக்கியம் மூலம் அரசனை குறிப்பாலுணர்த்துகின்றாள்.

அவ்வாறே.—அரசனும் பிக்குணியின் கருத்துக்குடன்பாடாகவே பேசுகின்றான்.

ஸந்தோஷம்.—"நல்ல வேளையாய்ப் பழியினின்று விடுபட்டேன்' என்று பேசும் அரசியின் பெருந்தன்மையும் மனப்போக்கும் புகழற்பாலன.

இது நிற்க.—ஜயஸேனையின் முன் வாக்கியத்தின் தொடர்ச்சியே இது.

காரியங்களை.—அரசியின் இவ்வாக்கியம் அரசனுக்குச் சுபசகுனமாயிற்றென்னலாம்.

அரசன்—(எழுந்து) தேவி, இந்த இடம் வெயிலுள்ளதாய்விட்டது. இந்த நோவுக்குக் குளிர்ச்சியே தக்க சிகித்ஸையாம் ஆகையால், படுக்கையை வேறிடத்திற்கு மாற்றுக.

அரசி—சிறுமிகாள், ஐயருடைய கட்டளையை நிறைவேற்றுக.

பரிஜனங்கள்—அவ்வாறே.

[பரிவாரத்துடன் அரசி சென்றாள்.

அரசன்—ஜயஸேனே, ஒருவருமறியாத வழியாய் என்னைப் பிரமத வனத்திற்குக் கூட்டிக்கொண்டு போ.

ஜயஸேனை—பிரபு இவ்வழி வரவேண்டும், இவ் வழி வரவேண்டும்.

அரசன்—(நடந்து) ஜயஸேனே, கௌதமன் காரியத்தை முடித்துவிட்டானா?

ஜயஸேனை—ஆம்.

அரசன்—என் விருப்பம் கைகூட இப்பொழுது தொடங்கியிருக்கும் சூழ்ச்சி மிகச் சிறந்ததெனத் தெரிந்திருந்தும், என் மனம், காரியம் நிறைவேறும் விஷயத்தில் அஞ்சி ஐயமுறுகின்றது.

(பிரவேசித்து)

விதூஷகன்—பிரபுவே, ஓங்கி வாழ்க. நான் செய்யவேண்டிய சுபகாரியங்கள் யாவற்றையும் செய்து முடித்துவிட்டேன்.

அரசன்—ஜயஸேனே, இனி நீ உனக்குரிய காரியத்தைச் செய்யப் போகலாம்.

ஜயஸேனை—பிரபுவின் கட்டளைப்படி.

[சென்றாள்.

---

இந்த இடம்.—இங்கேயே அரசி இருந்தால் தான் போகுமிடத்தை நேரில் காணக்கூடுமென்றஞ்சி அரசன், இவ்வாறு வேறு இடம்போகச் சொல்கின்றானே?

பிரபுவே.—மாளவிகையை விடுவித்ததும், ஸமுத்திர கிருகத்தில் நிறுத்தியதும் மற்றும் சுபகாரியங்களாம்.

**அரசன்**—நண்ப, மாதவிகை அறிவில் தாழ்ந்தவள். அவள் ஒன்றையும் ஆராயவில்லை யல்லவா ?

**விதூஷகன்**—தேவியின் முத்திரை மோதிரத்தைப் பார்த்த பின் ஆலோசிக்க என்ன இருக்கிறது ?

**அரசன்**—நான் முத்திரையைப் பற்றிப் பேசவில்லை. "அவ் விரண்டு பெயர்களையும் விடுவிப்பது ஏன் ? தேவியார், பரிஜனங்களை அனுப்பாமல் உம்மை அனுப்பக் காரணம் என்ன ?" என்பதை அவள் வினவியிருக்க வேண்டாமா ?

**விதூஷகன்**—வினவினாள் ஐயா, வினவினாள். அப்பொழுது எனக்கும் ஒரு புத்தி தோன்றிற்று. தக்கபடி விடை சொல்லிவிட்டேன்.

**அரசன்**—என்ன ? சொல்.

**விதூஷகன்**—"பிரபுவே, தங்களது ஜன்மநக்ஷத்திரத்திற்குக் காலபலம் இப்பொழுது நன்றாயில்லை. ஆதலால் சிறையிலிடப் பட்டவர்களெல்லாரையும் விட்டுவிட வேண்டும்." என்று அரசனிடம் சோதிடர்கள் கூறினார்கள். இதனைக் கேட்டதும் தேவியார், இராவதியின் மனம் நோகக்கூடாதென்று எண்ணி, 'அரசரேயன்றோ எல்லாரையும் விடுவிக்கின்றார்.' என்று சொல்லி நீயே மாளவிகையை விடச்செய் என்று எனக்குக் கட்டளையிட்டார்." என்று சொன்னேன். பிறகு இஃது உசிதமே என்றுகூறி மாதவிகை காரியத்தை நிறைவேற்றினாள்.

---

ஜன்மநக்ஷத்திரத்திற்கு.—"ஸோபஸர்க்கம் வோ நக்ஷத்ரம்" என்பது மூலம். உபஸர்க்கமாவது—பீடை. "அரசி தன் வேலைக்காரியை அனுப்பி மாளவிகையை விடுவித்தால் இராவதி மனவருத்தம் கொள்ளக்கூடும். விதூஷகன் விடுவிப்பதாயிருந்தால், அரசரே நேரில் எல்லாச் சிறையாளரையும் விடுவிக்கின்றார் என்று இராவதியுள்பட எல்லாரும் நினைப்பார்கள். அப்பொழுது மாளவிகையை விட்டதில் அரசிமீது இராவதிக்கு வருத்தம் ஏற்படக் காரணமில்லை என நினைத்து அரசி என் கையில் மோதிரத்தைக் கொடுத்து அனுப்பினாள் என்று மாதவிகைக்கு மறுமொழி கூறினேன்" என்கிறான் விதூஷகன்.

**அரசன்**— (விதூஷகனைக் கட்டி யணைந்து) தோழ, உனக்கு என் மீது பிரீதி உண்டு.

ஒருவனுக்குத் தனது நண்பர்களின் காரியங்களை நிறை வேற்றும் வழியைக் காணப் புத்திச் சிறப்பே காரணமென்ப தில்லை. காரியங்கள் நிறைவேறும் வழி, எத்துணை நுண்ணிய தாயிருப்பினும், அதனைக் காண நேசமும் காரணமாகலாம்.

**விதூஷகன்**— தோழ, விரைந்து செல்லுக. ஸமுத்திர கிரு கத்தில் மாளவிகையையும் அவள் தோழியையும் அமரச் செய்துவிட்டுத், தங்களை எதிர்கொள்ள வந்தேன்.

**அரசன்**—ஆம். நான் அவளைக் கண்டு கொண்டாட்டவேண்டும். முன் செல்லுக.

**விதூஷகன்**— தாங்கள் வாருங்கள். (நடந்து) இது தான் ஸமுத்திர கிருகம்.

**அரசன்**— (அச்சத்துடன்) நண்ப, உனது தோழி இராவதியின் வேலைக்காரியாகிய சந்திரிகை, பூப் பறித்துக்கொண்டு இந்தப் பக்கமாக வருகின்றாள். ஆகையால், நாம் இரு வரும் இந்தச் சுவர்ப் புறமாக மறைந்து நிற்போம்.

**விதூஷகன்**—ஆம். ஆம். கள்வரும் காமமுற்றாரும் சந்திரிகை யைக் காணாது ஒதுங்கவேண்டியவர் தாமே.

(இருவரும் சொன்னவாறே செய்கின்றனர்.)

---

ஒருவனுக்கு —ஸ்நேஹமில்லாவிடில் புத்தியிருந்தும் பயனில்லை. ஸ்நேஹமிருப்பின் புத்திகூர்மை இல்லாவிடினும் காரியம் கைகூடும். உனக்கோ, ஸ்நேஹமும் புத்தியும் சேர்ந்திருப்பதாலிக்காரியம் கைகூடத் தடை என்ன? என்பது கருத்து.

தோழ.—ஸமுத்திர கிருகமென்பது பூங்காவிலுள்ள ஒரு கட்டிடத் தின் பெயர்.

ஆம் ஆம்.—சந்திரிகை—நிலா. இராவதியின் வேலைக்காரி. நிலவில் திருடமுடியாது. காமுற்றவரை நிலா வருத்தும். ஆகையால் சந்திரி கையை இருவரும் பரிஹரித்தே ஆகவேண்டும்.

**அரசன்**— கௌதம, உன் தோழி மாளவிகை, என்னை எதிர்பார்க்கின்றாளா என்பதைச் சாளர வழியாகப் பார்ப்போம். வா.

**விதூஷகன்**— அவ்வாறே.

(இருவரும் பார்த்துக்கொண்டு நிற்கின்றனர்.)

(பிறகு மாளவிகையும் வகுளாவலிகையும் பிரவேசிக்கின்றனர்.)

**வகுளாவலிகை**— தோழி, அரசரை வணங்குக.

**அரசன்**— வகுளாவலிகை எனது சித்திரத்தைக் குறிப்பிடுகின்றாள் என்று நினைக்கின்றேன்.

**மாளவிகை**—(ஸந்தோஷத்துடன்) நமஸ்காரம். (வாயிற்படியைப் பார்த்து, வருத்தத்துடன்) அரசர் எங்கே? ஸகி, நீ என்னை ஏமாற்றுகின்றாய்.

---

கௌதம.—"கதம் நு தே ஸகீ மாம் ப்ரதிபாலயதி" என்பது மூலம். "எவ்வாறு எதிர்பார்க்கின்றாளெனப் பார்ப்போம்" என்றும் பொருள் கூறுவர்.

பிறகு.—இருவரும் ஸமுத்திர கிருகத்திலிருக்கத் திரை நீக்கப்பட்டது எனக் கொள்க.

தோழி.—ய: ப்ருஷ்டத: அக்ரத: பார்ச்வதோபி த்ருச்யதே" என்ற பாடமானால், "எவர் உனது பின்புறத்திலும் முன்புறத்திலும் இரு மருங்குகளிலும் காணப்படுகின்றாரோ, அந்த அரசரை வணங்குக" என்று மொழிபெயர்க்கவேண்டும். நான்கு சுவர்களும் ரத்தினம் பதித்தவைகளாகையால் எங்கும் அரசனுருவம் பிரதிபிம்பிக்கின்றதைப் பற்றி இவ்வாறு கூறப்பட்டது. அல்லது நான்கு பக்கங்களிலும் அரசனுருவம் சித்திரத்தில் வரையப்பட்டிருக்கின்றது எனக் கொள்ளலாம். மாளவிகை எப்பொழுதும் அரசனையே தியானித்திருப்பதால் அத்தியானத்தின் மஹிமையால் அவளுக்கு எங்கும் அரசன் தோன்றக்கூடுமென்று நினைத்து இவ்வாறு வகுளாவலிகை பரிஹாஸமாகக் கூறுகின்றாள் என்பது உண்மை. இது மேலே நடக்கும் காரியங்களில் வெளிப்படுகின்றது. "பச்யாமி தாமித இத: புரதச்ச பச்சாத்" என்ற பவபூதியின் செய்யுளும் இங்கு நினைக்கற்பாலது.

நமஸ்காரம்.—இந்த நமஸ்காரம் நன்றிக்கு அறிகுறியாக வகுளாவலிகைக்குச் செய்யப்பட்டதென்பதும் பொருந்தும்.

அரசன்—தோழ, மாளவிகையினுடைய மகிழ்வையும் வருத்தத்தையும் கண்டு நான் களிப்படைகின்றேன்.

ஸூரியன் மலைமீது எழும்பொழுதும் விழும்பொழுதும் தாமரை மலர்க்கு ஏற்படும் இரு நிலைகளையும் மாளவிகையின் அழகிய முகம் ஒரே க்ஷணத்தில் ஏற்றுக்கொண்டது.

வகுளாவலிகை—இதோ சித்திரத்தில் இருக்கின்றாரே அரசர்.

இருவரும்—(வணங்கி) பிரபு ஓங்கி வாழ்க.

மாளவிகை—தோழி, இன்று சித்திரத்திலிருக்கும் அரசரது உருவத்தை எவ்வாறு பார்க்கின்றேனோ, அவ்வாறு அன்று அவர் எதிரிலிருந்தும் என் ஆசைதீர அவரை நான் பார்க்கவில்லை.

விதூஷகன்—கேட்டீர்களா? இன்று சித்திரத்தில் தங்களைப் பார்ப்பதைப் போல அன்று நேரில் தங்களைப் பார்க்கவில்லை என்று சொல்லுகின்றாள். ஆகையால், தங்களுடைய யௌவனப்பருவம், 'மஞ்சட் பெட்டியினுட்கிடக்கும் ரத்தின அணியைப்போலப்' பாராட்டப்படாது பாழாகின்றது.

---

ஸூரியன்.—ஸூர்யோதய காலத்திலும் ஸூர்யாஸ்தமய காலத்திலும் தாமரைப் பூவிற்கு உண்டாகும் மலர்ச்சியும் வாட்டமும் மாளவிகையின் முகத்தில் ஒரே க்ஷணத்தில் உண்டாயின என்று கூறும் நமது மஹாகவிக்கு "உபமா காளிதாஸஸ்ய" என்ற புகழ் ஏன் ஏற்படமாட்டாது?

இதோ.—"ணம் ஏஸோ சித்த கதோ பட்டா" என்பது மூலம். "சித்த" என்ற பிராகிருத பாஷைப் பதத்திற்குச் "சித்ர" என்பதும், "சித்த" என்பதும் ஸம்ஸ்கிருத பதங்களாகலாம். "இதோ சித்திரத்திலிருக்கின்றாரே அரசர்" என்றும், "இவ்வரசர் உனது மனத்திலிருக்கின்றாரே" என்றும் இருவிதமாகக் கருத்துக்கொள்க.

கேட்டீர்களா.—"முதா இதானீம் மஞ்ஜூஷேவ ரத்நபாண்டம் யௌவனகர்வம் வஹஹி" என்பது மூலம். "நீ வீணாக யௌவனச் செருக்கை வஹிக்கின்றாய்" என்பது நேரான பதப்பொருள். பூணவேண்டிய ஆபரணம் மஞ்சட்பெட்டியினகத்ததானால் அஃது எவ்வாறு பயன்படாது போகுமோ, அவ்வாறே அநுபவிக்கவேண்டிய யௌவனம் உபயோகப்படாமல் பாழாகின்றதே என்கிறான் விதூஷகன்.

**அரசன்**—நண்ப, மாதர்கள் ஒன்றில் ஆவல் கொண்டாலும் அதனை நிறைவேற்ற இயற்கையாகவே அஞ்சுவார்கள். பார்—

காதலிகள், தமது காதலரைப் புதிதாகக் காணும்பொழுது அவரது உருவம் முழுவதையும் காணக் கருதுவார்கள். ஆயினும், அக்காதலிகளுடைய கண்கள் எவ்வளவு விசாலமாயிருந்தாலும் அவற்றின் பார்வைகள், அக்காதலர்மீது முழுதும் விழுவதில்லை.

**மாளவிகை**—தோழி, இவள் யாவள்? முகத்தைத் திருப்பிக் கொண்டு நிற்கின்றாள். இவளை அரசர் அன்பு நிறைந்த கண்ணால் பார்த்துக்கொண்டு நிற்கின்றாரே.

**வகுளாவலிகை**—அரசரை அடுத்து நிற்கின்ற இவள் இராவதியன்றோ.

**மாளவிகை**—ஸகி, அரசர் தக்ஷிண நாயகரல்லரென்று எனக்குத் தோன்றுகின்றது. இவர், அந்தப் புரத்தினர் அனைவரையும் விட்டு, இவளொருவளது முகத்தையே குறியாகப் பார்த்துக்கொண்டிருக்கின்றாரல்லவா?

**வகுளாவலிகை**—(மனத்துள்) சித்திரத்தில் வரைந்துள்ள அரசருருவத்தை உண்மையாகவே அரசரென்று எண்ணி இவள் பொறாமைப் படுகின்றாள். இருக்கட்டும். இவ

---

தோழி.—எப்பொழுதுமுள்ள பாவனையின் மஹிமையால், சித்திரத்தில் காணப்படும் அரசனுருவம் மாளவிகைக்கு உண்மை அரசனாகவே தோன்றத் தொடங்கிவிட்டது.

ஸகி.—"தல்யோ z ரேகத்ர தக்ஷிண:"—பல மனைவிகளிருந்தாலும் அவர்கள் எல்லாரையும் ஒருவரேபோலப் பாராட்டுகின்றவன் தக்ஷிண நாயகனாவான். எல்லாரிடமும் ஒரேமாதிரியில் பிரீதிவைக்க முடியாதாகையால், வெளிப்படையாகப் பாராட்டுதல் ஒரேரீதியிலிருக்கவேண்டும் என்பது கருத்தெனக் கூறுவர். இங்கு இராவதியைப் பார்த்தவண்ணமாகவே அரசனுருவம் எழுதப்பட்டிருக்கின்றது. சித்திரத்தை உண்மை என நினைத்து, "இராவதியையே விடாமல் பார்த்துக்கொண்டிருப்பதால், இவ்வரசர் தக்ஷிணநாயகரல்லர்" எனக் கூறுகின்றாள் மாளவிகை,

ளோடு சிறிது விளையாடுகிறேன். (வெளிப்படையாக)தோழி, இவள் அரசரது அன்பிற்குரியவள்.

**மாளவிகை**—அப்படியானால் நான் ஏன் என்னைக் கஷ்டப் படுத்திக் கொள்ளவேண்டும்.

(அஸூயையுடன் முகத்தைத் திருப்புகின்றாள்.)

**அரசன்**—நண்ப, உன் தோழியின் முகத்தைப் பார்—

நெற்றிப் பொட்டு நெறியுமாறு புருவங்கள் சிணுங்க உதடுகள் துடிக்கப் பொறாமையுடன் மாளவிகை தனது முகத்தைத் திருப்புவதைப் பார்த்தால், ‘ஊடலேற்ற காலையில் காதலனிடம் காட்டவேண்டிய செய்கை இன்னது’ என்று இவளுக்கு நாட்டியாசாரியன் கற்பித்ததை இவள் இங்கு அழகாக அபிநயித்துக் காட்டுகின்றாள் போலும்.

**விதூஷகன்**—இப்பொழுது ஸமாதானப் படுத்த ஒருப்பட்டிருக்க.

**மாளவிகை**—ஆரிய கௌதமரும் இங்கு இந்த அரசரை அண்டி நிற்கின்றாரே.

(பிறகு வேறு பக்கம் திரும்ப விரும்புகின்றாள்.)

---

நெற்றிப்பொட்டு.—“மாளவிகை, நாட்டியாசாரியன் கற்பித்ததை அழகாக அபினயித்துக் காட்டுகின்றாள்” என்று கூறும் நம் மஹாகவி, தமக்குள்ள இயற்கை வர்ணனைப் பெருமையை வெகு அழகாக வெளிப்படுத்துகின்றார்.

இப்பொழுது.—“தாங்கள் அங்குச் செல்லத் தகுந்த ஸமயம் இது” என்று விதூஷகன் அறிவிக்கின்றான். இங்கு மூன்றாம் அங்கத்திலுள்ள “இந்த மாளவிகையின்......” என்ற அரசனது செய்யுளும், விதூஷகனது மறுமொழியும் நினைக்கற்பாலன.

ஆரிய கௌதமரும்.— இங்குச் சித்திரத்திலுள்ளதைப் போலவேயன்றோ உண்மைநிலையும். இவ்வாறு உள்ள நிலையும் வெளிப்படுமாறு பொருந்த எழுதுவது, நமது கவியின் ஸாமர்த்தியங்களிலொன்றாம்.

வேறு பக்கம்.— விதூஷகனும் உண்மையில் கூடவிருப்பதாக எண்ணி வெட்கத்தால் வேறுபக்கம் திரும்ப நினைக்கின்றாள் மாளவிகை.

**வகுளாவலிகை**— (மாளவிகையைத் தடுத்து) இப்பொழுது உனக்குக் கோபமில்லையே?

**மாளவிகை**— நான் நெடுநேரம் கோபங்கொள்ளவேண்டும் என்று நீ விரும்புவதாயின், இதோ போன கோபத்தை மறுபடியும் வரவழைக்கின்றேன்.

**அரசன்**—(அடுத்துச் சென்று)

ஏ கருங்குவளைபோன்ற கண்ணுளே, சித்திரத்தில் வரையப்பட்டிருக்கும் என் செய்கையைக் கண்டு நீ ஏன் இவ்வாறு கோபிக்கவேண்டும்? இதோ நேரில் வந்திருக்கும் நான் மற்றவர்க்கில்லாமல் உனக்கு மாத்திரமிருக்கும் அடிமையன்றோ?

**வகுளாவலிகை**—பிரபு ஓங்கி வாழ்க.

**மாளவிகை**—(மனத்துள்) அந்தோ, சித்திரத்திலுள்ள அரசரைப் பற்றியா நான் பொறாமை கொண்டது?

(வெட்கித் தலைகுனிந்து, கைகூப்புகின்றாள். அரசன் மையல் மயக்கம் ஏறித் திகைத்து நிற்கின்றான்.)

**விதூஷகன்**—தோழ, ஏன் இப்படித் தாங்கள் நேசங்காட்டாமல் சும்மா திகைத்து நிற்கவேண்டும்?

**அரசன்**—உன் தோழியை நம்பமுடியாமலிருப்பதால்தான்.

**விதூஷகன்**—அப்படியன்று. இவளை நம்பாதிருக்கக் காரணம் என்ன?

---

இப்பொழுது.—வெட்கத்தால் வேறு பக்கம் திரும்பியதை, கோபத்தால் திரும்பியதாகப் பாவித்து வகுளாவலிகை வினவுகின்றாள்.

நான்.—இம்மறுமொழியின் அழகே அழகு.

தோழ.—"கிம் பவான் உதாஸீன இவ" என்பது மூலம். கைகூப்பிய மாளவிகையைப் பாராட்டவேண்டாமா? சும்மா நிற்கலாமா?" என்றான். அரசனுக்கு அப்பொழுது நேர்ந்த மதனகாதர்ய (மையல் மயக்க)த்தை விதூஷகன் அறிந்திலன்.

உன் தோழியை.— அரசன் தனது காமத்திகைப்பை மறைத்து, இந்த ஸமயத்திற்கேற்ப எவ்வளவு அழகாக மறுமொழி கூறுகின்றான்!

*அரசன்—கேள்—*

இவள் கனவில் என் கண்களுக்குக் கணப்பொழுது புலப்பட்டுவிட்டு அடுத்தநொடியிலேயே மறைந்துவிடுகின்றாள். தனிமையாக என் கைகளினிடையில் அகப்படுகின்றாளாயினும், உடனே திடீரென்று ஓடிவிடுகின்றாள். இவள் இவ் வண்ணம் கூடிக்குலாவ ஏமாற்றுவதால், காமநோய் பிடித்து வாடிநிற்கும் எனது மனம், இவளிடம் எவ்வாறு நம்புதல் கோள்ளும் ?

வகுளாவலிகை—*ஸகி, நீ பல தடவைகளில் பிரபுவை வஞ்சித்திருக்கின்றாய். ஆகையால் பிரபுவுக்கு உன்னிடம் நம்புதல் உண்டாகும்படி நடந்துகொள்.*

*மாளவிகை—பாக்கியம் குறைந்த எனக்குப் பிரபுவின் சேர்க்கை கனவிலும் கிடைப்பதில்லை.*

---

இவள்.—*அரசன் தனது நிலையைச் செவ்வனே விளக்குகின்றான். "எனக்கு உறக்கம் வருவதில்லை. வந்தாலும் ஒரு நொடிநேரம்தான். கனவிற் கண்ணிற்பட்டவளுக்கு உபசாரஞ் செய்யத் தொடங்குகையில் விழிப்பு ஏற்பட்டுவிடுகின்றது. மறுக்ஷணம் உறக்கம்வந்து முன்போலக் கனவில் தோன்றவே இறுகத் தழுவ நினைத்துக் கைகளைச் சேர்க்க, இக்கைகள் ஒன்றோடொன்று முட்ட உடனே தூக்கத்திலிருந்து எழுந்துவிடுகின்றேன்" என்றான் அரசன். "என்னைப் பல தடவைகளிலும் கனவில் ஏமாற்றியதுபோல இப்போதும் ஓடியொளிந்து ஏமாற்றக் கூடாது" என்பது அரசன் மனத்திலுள்ள வேண்டுகோள். இங்கு "ப்ராஜாகராத்......" "ஈதமுபலபே நித்ராம்..." "மாமாகாசப்ரணிஹித புஜம்......" என்ற சாகுந்தள விக்ரமோர்வசீய மேகஸந்தேசச் செய்யுள்கள் நினைக்கற்பாலன.*

ஸகி நீ.–*"இப்பொழுது உனது செய்கையால் அரசருக்கு நம்புதல் உண்டாகவேண்டும். ஆகையால் அத்தகைய செய்கையொன்று செய்ய வேண்டும்" என்று புத்திமதியாகிய வகுளாவலிகை ஸமயோசிதமாகப் பேசுகின்றாள்.*

பாக்கியம்.—*வகுளாவலிகையும் விதூஷகனும் எதிரில் நிற்கச் சிறு பெண்ணாகிய மாளவிகை, தனது காதலைச் செய்கையால் எங்ஙனம் காட்டக்கூடும்? ஆதலால் மறுமொழியாலேயே தனது ஆழ்ந்த காதலை சமத்காரமாகத் தெரிவிக்கின்றாள். "தங்களுடைய காதல் பெரிதென்று*

**வகுளாவலிகை**—பிரபு இவளுக்கு மறுமொழி அளிக்க வேண்டும்.

**அரசன்**—எதற்காக மறுமொழி அளிக்கவேண்டும்? கர்மன் என்ற அக்கினியை ஸாக்ஷியாகவைத்து நான் என்னையே உனது தோழிக்கு அளித்து விட்டேன். உன் தோழி, எனக்குப் பணிவிடை செய்யவேண்டாம். நானே உன் தோழிக்குத் தனிமையில் பணிவிடை செய்வேன்.

**வகுளாவலிகை**—இஃது என்னிடம் காட்டிய அருளே.

**விதூஷகன்**—(நடந்து, பரபரப்புடன்) வகுளாவலிகே, அதோ மான்; அசோகக்கன்றின் தளிர்களைத் தின்னவருகின்றது. வா; அதனைத் தடுப்போம்.

---

நினைக்கவேண்டாம். தங்களுக்கு ஒரு க்ஷணநேரமாவது தூக்கம் வருகிறது. எனக்கோ தங்கள் மீதுள்ள காதலின் வலிமையால் எப்பொழுதும் கவலை குடிகொள்ள, அல்லும் பகலும் அரைக்ஷணம்கூட உறக்கம் வருவதில்லை. ஆகையால் தங்களைவிடப் பெரிதும் வருந்தி நிற்பவள் நான்தான். நான் ஏமாற்றமாட்டேன்." என்பது மாளவிகையின் கருத்தாம்.

பிரபு.—மாளவிகை பேசியதை மீறும்படி பேச அரசனுக்கு இடமிராது என்று வகுளாவலிகை கருதுகின்றாள் போலும்.

எதற்காக.—ரஸிகசிரோமணியாகிய அரசன் எத்துணை அழகாய் ப்ரேமரஸம் ததும்ப மறுமொழி கூறுகின்றான்! இந்த ஸந்தர்ப்பத்தில், சாகுந்தளத்திலுள்ள ஸகிகளின் வார்த்தையும், அரசனது "பரிக்ரஹ பஹுத்வேபி......" என்ற செய்யுளும், விக்ரமோர்வசீயத்திலுள்ள சித்திரலேகையின் பேச்சும், புரூரவனது "அனன்யநாரீஸாமான்யோ தாஸஸ்த்வஸ்யா:" என்ற செய்யுளும், அந்த ஸந்தர்ப்பங்களும் நினைக்கற்பாலன.

வகுளாவலிகே.—மேதாவியான விதூஷகன், இங்கிருந்து வெளிச் செல்ல ரஸிகையான வகுளாவலிகையிடம் ஒரு காரணத்தைக் கற்பித்துப் பேசுகின்றான். இங்கு ஒருமான் அசோகத்தளிரைத் தின்னவருவதைப் போலவே, சாகுந்தளத்தில் துஷ்யந்தனும் சகுந்தலையும் தனித்திருக்கக் காரணமாக, ஒரு மான்குட்டி தன் தாயைத் தேடிக்கொண்டு வருகின்றது.

**வகுளாவலிகை**—அப்படியே.

[புறப்பட்டுச் சென்றாள்.

**அரசன்**—தோழ, நீ இவ்வாறே நம்மைக் காப்பதில் தவறாதவனயிருக்கவேண்டும்.

**விதூஷகன்**—கௌதமனுக்கு இது கூடச் சொல்லப்படவேண்டுமா ?

[செல்கின்றான்.

**வகுளாவலிகை**—ஆரியகௌதமரே, நான் மறைவில் நிற்கின்றேன். நீர் வாயிற்படியை காத்துக்கொண்டிருப்பீராக.

**விதூஷகன்**—உசிதம்.

[வகுளாவலிகை செல்கின்றாள்.

**விதூஷகன்**—(சுற்றி நடந்து, பார்த்து) இந்தத் தரை ஸ்படிகக் கற்களால் கட்டப்பட்டிருக்கின்றது. இதில் உட்காருகின்றேன். (உட்கார்ந்து) ஆ ஹா ! இக்கற்பாறை தேஹத்தில் படும்பொழுது எவ்வளவு ஸுகமாயிருக்கின்றது.

(தூங்குகின்றான்.)

(மாளவிகை பயந்து நிற்கின்றாள்.)

**அரசன்**—ஏ ஸுந்தரி, என்னுடன் கூடிக்குலாவ நீ பயப்பட வேண்டாம். அப் பயத்தை ஒழித்துவிடு. நானே நெடுநாளாக உனது நேசத்தை எதிர்பார்த்து நிற்கின்றவன். இதோ நான் தேமாமரம் ஆகின்றேன். ' நீ என்மீது மாதவிக்கொடியின் செய்கையைச் செய்வாயாக.

---

ஆரிய.—ஒரு புருஷனேடு தனித்து நிற்பது தகாதென நினைத்து வகுளாவலிகை வேறிடம் செல்கின்றாள். விதூஷகனைத் தனிமையில் விட்டது, அவன் தூங்கவும், பிதற்றவும், இராவதி கோபிக்கவும் இடம் தருகின்றது.

ஏ ஸுந்தரி.—"லதாவேஷ்டிதகம்" என்ற ஆலிங்கனத்தைச் செய்ய வேண்டும் என்கிறான் அரசன். "கதே ஸஹகாரதாம்" என்பது மூலம். ஸஹகார பதத்திற்குத் துணைவன் என்ற அர்த்தமுமுண்டு. அதுவும் இங்குப் பொருந்தும்.

**மாளவிகை**—பிரபுவே, தேவியை நினைக்க எனக்கு அச்சமுண்டாவதால், எனக்குப் பிரியமான காரியத்தையும் செய்ய முடியாதவளாயிருக்கின்றேன்.

**அரசன்**—நீ அப்படிப் பயப்படவேண்டாம்.

**மாளவிகை**—என்னைப் பயப்படவேண்டாமென்று இப்பொழுதுகூறும் தங்களுடைய நிலைமையைத் தேவியாரது முன்பில் நான் பார்த்திருக்கின்றேனே.

**அரசன்**—ஏ செங்கனிவாயாளே, பைம்பிக அரசர்களுக்குத் தாக்ஷிண்யமென்பது, வம்ச பரம்பரையாக வரும் விரதமன்றோ. ஆயினும், ஏ மலர்க்கண்ணாளே, எனது உயிர் நிற்பது உன்னை ஒருகால் அடையலாமென்ற எண்ணத்தால் மாத்திரமே

ஆதலின், வெகு காலமாகக் காதலித்துவரும் என்னிடம் அருள் புரியவேண்டும்.

(அணைவதாக அபினயிக்கின்றான். மாளவிகை தடுப்பதாக அபினயிக்கின்றாள்.)

---

பிரபுவே—"மதனஹஸ்தகதாபி ஆத்மனோ ந ப்ரபவாமி" என்ற சகுந்தலையின் வாக்கியமும் இங்கு நினைக்கற்பாலது.

என்னை.—அரசன் உறுதிகூற வேண்டுமெனக் கருதிச் சிறிது பரிஹாஸமாகவும் இடித்தும் கூறுகின்றாள் மாளவிகை.

ஏ செங்கனி.—"தாக்ஷிண்யம் நாம பிம்போஷ்டி பைம்பிகானும் குலவ்ரதம்." என்பது மூலம். "பைம்பிகர்கள்" என்பது அக்கினிமித்திரன் வம்சத்திய அரசர்களுக்குப் பட்டப்பெயர் எனக் கூறுவர். வேறு சிலர் "அக்கினி மித்திரனது வம்சம் பிம்பம் எனப்படும். அம் மரபினர் பைம்பிகராவர்" என்பர். "பிம்பம் என்றால் ஸ்திரீகளுடைய மனத்தில் ப்ரதிபலிப்பதாம். அதனை ஸ்வபாவமாக உடையவர்கள் பைம்பிகர்கள்" என்பது ஒருவரின் உரை. பைம்பிக பதத்திற்கு "முகத்தெளிவுள்ளவர்கள்" என்று ஒருவர் உரை எழுதுகின்றார். "குலவ்ரதம்" என்பதால், இஃது அவசியம் செய்தே ஆகவேண்டுமென்பது கருத்தாம். "தாக்ஷிண்யம் எங்களுக்குக் குலதர்மமாகையால், நான் வெளிப்படையாகத் தேவியையும் பாராட்டக் கடமைப்பட்டவன்" என்றான் அரசன். "சக்யமா சாபந்தேன ஆத்மானம் தாரயிதும்" "ஆசாபந்த: ஸாஹயதி" "ஆசாபந்த:

*அரசன்*—மடந்தையர் புதிதாக மன்மதகாரியத்தில் இறங்குவது, பெரிதும் இனிதாயிருக்கின்றது. இவளோ,

மேகலையை அவிழ்க்க அதன்மீது நான் என் விரல்களை வைக்கும்போழுது, உடலம் நடுங்கி எனது கையைத் தடுக்கின்றாள். நான் வலிந்து தழுவத் தொடங்குகையில், தன்னுடைய கைகளால் கொங்கைகளை மூடிக்கொள்கின்றாள். அதரபானஞ் செய்ய விரும்பி, நான் இமையழகு பொருந்திய கண்களுள்ள இவளது முகத்தை நிமிர்த்துத் தூக்குங்கால், அம்முகத்தைத் திருப்பிக்கொள்கின்றாள். இவ்வாறு மேலாகத் தடைகளைச் செய்பவளாகத் தோன்றினாலும் இவள், எனது விருப்பம் நிறைவேறுவதால் உண்டாகும் இன்பத்தை அளிக்காமலிருக்கவில்லை.

(பிறகு இராவதியும் நிபுணிகையும் பிரவேசிக்கின்றனர்.)

இராவதி—அடி நிபுணிகே, "ஸமுத்திர கிருஹத்தின் வெளித்தாழ்வாரத்தில் ஆரிய கௌதமர் தனிமையிலிருக்கக் கண்டேன்" என்று சந்திரிகை உன்னிடம் கூறியதாக நீ மொழிந்தாயன்றோ. இஃது உண்மைதானா?

நிபுணிகை—வேறு விதமாகத் தங்களிடம் தெரிவிப்பேனோ?

இராவதி—அவ்வாறாயின், உயிருக்கு மன்றாடிப் பிழைத்த நம் பிரபுவின் அருமைத்தோழரைப்பார்க்கவும் அங்குத்தானே செல்வோம்.

நிபுணிகை—தங்கள் வார்த்தை, முடிவுபெறாமல் மிகுதியுள்ளதுபோலத் தோன்றுகின்றதே.

இராவதி—ஆம். சித்திரத்திலிருக்கும் பிரபுவை வழிபடவும் தான்.

நிபுணிகை—என்றால், நேரில் அரசரைக்கண்டு வழிபட்டு.

---

குஸுமஸத்ருசம்..." "ஸ்நேஹதாக்ஷிண்யயோர் யோகாத்காமீவ ப்ரதிபாதி மே" "அலமலமந்த:புரவிரஹபர்யுத்ஸுகஸ்ய ராஜர்ஷேர்நிர்பந்தேன" "இதமனன்ய பராயணமன்யதா" என்பனபோன்ற விக்ரமோர்வசீயாதி வாக்யங்கள் இங்கு நினைக்கற்பாலன.

தங்கள்.—"பர்து: ப்ரியவயஸ்யம் ப்ரேக்ஷிதும் ச" என்பது மூலம்,

நன்மொழி கூறலாகாதோ?

**இராவதி**—அடி அறிவிலி, அரசருடைய மனம் வேறொருவளிடம் சென்றபின், அவரும், சித்திரத்திலுள்ள அவருருவமும் எனக்கு ஒன்றுதான். ஆயினும், நான் முன்பு முறை தவறி நடந்த குற்றத்திற்குப் பரிஹாரமாக இவ்வண்ணம் செய்யக் கருதுகின்றேன்.

**நிபுணிகை**—தாங்கள் இவ்வழி வரவேண்டும். இவ்வழி வரவேண்டும்.

[இருவரும் நடக்கின்றனர்.

(பிரவேசித்து)

**வேலைக்காரி**—தாங்கள் ஓங்கி வாழ்க. "எனக்கு யாரிடத்திலும் விரோதம் பாராட்டக்கூடிய ஸமயமல்ல இது. ஆயினும் உன்னிடம் எனக்குள்ள மதிப்பை வெளிப்படுத்தவே மாளவிகையை அவள் தோழியுடன் சிறையிலடைத்தேன். உனக்கு விருப்பமிருந்தால், உன் விஷயமாக அரசரிடமும் பேசுகின்றேன். உன் எண்ணத்தைச் சொல்" என்று தேவியார் தங்களிடம் தெரிவிக்கச் சொன்னார்.

---

"ச" என்ற உம்மையைக்கொண்டு இவ்வாறு வினவுகின்றான்.

அடி அறிவிலி.—"கேவலம் உபசாராதிக்ரமம் ப்ரமார்ஷ்டும் அஸ்மாகம் அயம் ஆரம்ப:" என்பது மூலம். ஊடலேற்றால், தலைவன் காலில் விழுந்தவுடன் அக்கோபத்தை விடுவது முறை. அவ்வாறு செய்யாதது முறைதவறி நடந்ததாகும் என்று கூறுகின்றாள். சித்திரத்திலுள்ள அரசன் தன்னையே நோக்கிக்கொண்டிருப்பதால் இப்போது அரசனைவிட இவ்வுருவமே தனக்கு மிகப் பிரியமானது என்பது இராவதியின் உட்கருத்து. இங்கு "அவநாதப்ராணிபாதா:......" என்ற விக்ரமோர்வசியச் செய்யுளும் நினைக்கர்பாலது.

தாங்கள்.—புத்திரன் அசுவமேதக் குதிரையுடன் க்ஷேமமாய்த் திரும்பிவரவேண்டும் என்று எண்ணி, மனத்தூய்மையுடன் தானதர்மங்களைச் செய்துவருவதால், இப்பொழுது எவரிடத்திலும் துவேஷம் பாராட்டுவது தனக்குத் தகாது என்கிறாள் தாரிணி. ஆ! என்னே!! மஹாகவியின் கதாபந்த ஸாமர்த்தியம். இனி இராவதி மாளவிகையைப் பற்றி அரசியிடம் யாதொன்றும் தெரிவிக்க முடியாதபடி நமது கவி அழகிய தந்திரமொன்றைப் புகுத்திவிட்டார்.

**இராவதி**—நாகரிகே, "தேவியாரை ஏவ நான் யாவள்? தம் வேலைக்காரியைத் தண்டித்ததால் என்னிடம் தங்களுக்குள்ள பிரீதி வெளியாயிற்று. தங்களைத்தவிர வேறு யாருடைய அருளால் நான் வாழ்கின்றேன்." என்று நான் விண்ணப்பம் செய்ததாகத் தேவியாரிடம் விஜ்ஞாபநம் செய்.

**வேலைக்காரி**—அவ்வாறே.

[சென்றாள்.

**நிபுணிகை**—(நடந்து, பார்த்து) இதோ கடைத்தெருக் காளையைப் போல ஆரிய கௌதமர், ஸமுத்திர கிருஹத்தின் வாயிற்படியில் உட்கார்ந்துகொண்டே உறங்குகின்றாரே.

**இராவதி**—ஐயோ, விஷமயக்கம் இன்னமும் மிகுந்திருக்காதே?

**நிபுணிகை**—முகம் தெளிந்து காணப்படுகின்றது. மேலும், துருவஸித்தியன்றோ சிகித்ஸை நடத்தியது. ஆகையால் நாம் கெடுதலாக நினைக்க இடமில்லை.

**விதூஷகன்**—(தூக்கத்தில் பிதற்றுகிறன்.) அம்மா மாளவிகே,

**நிபுணிகை**—அம்மா, கேட்டீர்களா? எப்பொழுதும் நம்மிடமிருந்து வாயனைப் பொருளை வாங்கித் தின்று வயிறுகொழுத்துக்கிடக்கும் இந்தப் பாழும் கௌதமர் இப்பொழுது தூக்கத்தில் மாளவிகையைக் கூப்பிடுகின்றார். இவரை நம்பித் தமது காரியத்தைச் செய்ய ஏவுவார் யார்?

---

நாகரிகே.—"என்னுடைய ஸகல யோகக்ஷேமங்களும் தங்களுடைய தயையைப் பொறுத்திருக்கின்றன. ஆகையால் என்னுடைய க்ஷேமத்தை ஆராய்ந்து உசிதம்போலத் தாங்களே அரசரிடம் விண்ணப்பஞ் செய்யவேண்டுமேயன்றி, 'இவ்வாறு கூறுக' என்று தங்களை நான் தூண்டுவது உசிதமா?" என்பது கருத்து.

கேட்டீர்களா.—வாயனைப் பொருள்கள்—கொழுக்கட்டை முதலியவை. நமது உப்பைத் தின்றுவிட்டு நம்மையே வஞ்சிப்பதைப்போலவே இவர் மற்றவரையும் வஞ்சிப்பாரன்றோ. அவ்வாறாயின் இவரை யார் நம்புவார்? என்றாள் நிபுணிகை. இங்குக் காணப்படும் வேறு பாடங்கள் சிறந்தவையல்ல.

**விதூஷகன்**—நீ இராவதியை மீறியவளாகுக.

**நிபுணிகை**—என்னே! பயங்கரமான வார்த்தை. கேட்டீர்களா? இந்த அதமப் பிராமணர் பாம்பினின்று பயந்தவர். ஆதலின், நான் தூண் மறைவிலிருந்துகொண்டு பாம்புபோல் வளைந்த இந்தக் கோலால் இவரைப் பயப்படுத்துகிறேன்.

**இராவதி**— இந்த அயோக்கியனைப் பாம்பு கடிக்கத்தான் வேண்டும்.

(நிபுணிகை விதூஷகன்மீது கோலைப் போடுகின்றாள்.)

**விதூஷகன்**— (திடீரென உணர்ந்து) ஐயோ ஐயோ; பாம்பு என்மீது விழுந்துவிட்டதே.

**அரசன்**--(விரைந்து வந்து) தோழ, பயப்படவேண்டாம், பயப்படவேண்டாம்.

**மாளவிகை**—(பின் தொடர்ந்து) பிரபுவே, விரைந்து வெளிச் செல்லவேண்டாம். பாம்பு என்று சொல்லப்படுகிறது.

**இராவதி**—அந்தோ, அந்தோ. அரசரும் இந்தப் பக்கமாகவே ஓடிவருகிறார்.

---

நீ இராவதியை.—மாளவிகை கலைஞானத்தில் இராவதியை மீறியவளென்பதை அறிந்த விதூஷகன், அரசனன்பிலும் அவ்வாறே மாளவிகை ஆகவேண்டும் என்றே எப்பொழுதும் மனத்தில் எண்ணியிருப்பான். ஆகையால் அவனுள்ளத்தில் பதிந்து கிடந்த எண்ணம், உறக்கத்தில் அவனறியாது வெளிக்கிளம்புகின்றது.

என்னே.—"ச்ருதம் எதத் அத்யாஹிதம்" என்பது மூலம். "அத்யாஹிதம் மஹாபீதி:" என்பது நிகண்டு. இந்த வார்த்தை கர்ணகடோரமாயிருந்து தங்களை நடுங்கச்செய்வதால் இதனையே மஹாபயமென்றாள்.

இந்த.—"இவனைப் பாம்பு கடிக்க" என்ற வசைமொழி இப்பொழுதும் வழக்கத்திலுள்ளது.

அந்தோ.—விதூஷகனும் அரசனும் இங்குச் சேர்ந்திருப்பதால் ஒருகால் மாளவிகையும் இருக்கக்கூடும் என்று நினைத்து, இராவதி "ஐயோ ஐயோ" என்கிறாள்.

**விதூஷகன்**—(சிரித்துக்கொண்டு) ஓ, கோலா இது? தாழை முட்களால் கீறி, பாம்பு கடித்தாற்போலக் காட்டினேனே. அஃது உண்மையாகவே பலித்துவிட்டது என்று நினைத்தேன்.

(பிறது திரையைத் தள்ளிக்கொண்டு வகுளாவலிகை பிரவேசிக்கின்றாள்.)

**வகுளாவலிகை**—பிரபு இங்கு வரவேண்டாம். இங்கு வளைந்த போக்குள்ள பாம்புபோலக் காணப்படுகிறது.

**இராவதி**—(விரைவில் அரசனிடம் சென்று) தம்பதிகளின் பக்லேற்பாடு, இடையூறின்றி எண்ணப்படி நிறைவேறியதா?

(எல்லாரும் இராவதியைக் கண்டு திடுக்கிட்டனர்.)

---

ஓ, கோலா.—வேறு பாடப்படி "நான் தாழை முட்களால் கீறிக்கொண்டு, பாம்பின்மீது பழி சுமத்தினேனல்லவா? அது உண்மையில் பலித்து விட்டது என்று நினைத்தேன்" என்று மொழிபெயர்க்க வேண்டும்.

பிறது.—"ப்ரவிசதி படாக்ஷேபேண" என்பது மூலம். படம் என்றால் வஸ்திரம், இங்குத் திரை. விரைவில் வரவேண்டிய காரியங்களில் இங்ஙனம் திரையைத் தள்ளிக்கொண்டு வருகிறதாக எழுதுவது நாடக ஸம்பிரதாயம்.

பிரபு.—"இஹ குடிலகதி: ஸர்ப்ப இவ த்ருச்யதே" என்பதுமூலம். பாம்பு வளைந்து வளைந்தே செல்லுமாதலின், வளைந்த போக்குள்ள என்ற அடைமொழி ஸர்ப்பத்திற்குப் பொருந்தும். "இவ" என்ற பதத்திற்குப் "போல" என்பது பொருள். "தூரே திஷ்டன் தேவதத்த இவ ஆபாதி—தூரத்தில் நிற்பவன் தேவதத்தனைப்போலக் காணப்படுகின்றான்" என்ற விடத்தில்போல் இங்கும் ஸர்ப்பபக்ஷத்தில் "இவ" என்ற பதம் ஸம்பாவனையைக் (ஒரு பக்கம் சாய்ந்து நிற்கும் ஐயம்)குறிக்கும். இங்கு வகுளாவலிகை, இராவதியின் வரவினைக் குறிப்பாலுணர்த்துகின்றாள். இங்குக் குடிலகதி என்றால் நேர்மையற்ற மனப்போக்குடையவள் என்று பொருள் கொள்ளவேண்டும். "ஸர்ப்பம்போலப் பயப்படவேண்டியவளாய் நேர்மையற்ற மனத்தினளாயிருக்கும் இராவதி இங்குக் காணப்படுகின்றாள்" என்பது குறிப்பாலுணர்த்தும் பொருள். இப்பொழுது "இவ" என்பது உவமையைக் குறிக்கும்.

**அரசன்**—அன்பிற்குரியவளே, இவ்வுபசாரம் புதியதாயிருக்கின்றதே.

**இராவதி**—வகுளாவலிகே, தூதுவிஷயமாக நீ ஏற்றுக்கொண்ட பொறுப்பு நல்லவேளையாய் நிறைவேறியது. ஸந்தோஷம்.

**வகுளாவலிகை**—தங்கள் மனம் தெளியுமாக. தவளைகள் கதறுகின்றன என்று நினைத்தா இந்திரன் பூமியில் மழை பொழிகின்றான்? "நான் செய்ததுதானா" என்பதை அரசரிடமே கேளுங்கள்.

**விதூஷகன்**— அவ்வாறன்று. அரசர், தங்களது காலில்

---

அன்பிற்கு.—"பிரபு ஓங்கி வாழ்க" என்றல்லவோ முன்பு முகமன் கூறுவது வழக்கம். இவ்வாறு கூறுவது புதியதன்றோ என்கிறான்.

வகுளாவலிகே.—அரசன் மீதுள்ள வருத்தமும் வகுளாவலிகைமேலுள்ள கடுங்கோபமும் அரசனுக்கு மறுமொழிகூற இராவதியை விடவில்லை.

தங்கள்.—"இந்திரன் மழை பொழிந்து பூமியைக் குளிரச் செய்வதில் அவனுடைய கருணை காரணமேயன்றி வேறு காரணமுண்டோ? அந்தப் பூமி குளிர்ந்து ஜலம் எங்கும் தங்கியிருந்தால், அப்பொழுது அதனைக் கண்டு மகிழ்ந்து தவளைகள் சப்திக்கின்றன. மழை பெய்த பிறகே இவை சப்திக்கின்றனவேயன்றி அதற்கு முன் சப்திக்கின்றனவோ? இல்லை. அதுபோல நம் பிரபு தானாகவே மாளவிகையிடம் கருணைகூர்ந்து அவளை மகிழ்விக்க, அதனைக்கண்டு நானும் மகிழ்கின்றேனேயன்றி நான் அரசரைத் தூண்டக்கூடுமோ? என் தூண்டலை அரசர்தாம் ஏற்றுக்கொள்வாரா? இதனை ஆராய்ந்து பாருங்கள். என் மீது சினங்கொள்ளவேண்டாம். இதில் ஸம்சயமிருந்தால் அரசரையே கேளுங்கள்." என்றாள் வகுளாவலிகை. "இந்திரனைப்போல நம் பிரபுவும் பொது மனிதரன்றோ. ஆகையால் எல்லாரையும் மகிழ்விக்கின்றார் அவர். உனக்கு ஏன் இவ்வளவு பொறாமை. அவரே முதலில் இவ்விஷயத்தில் இறங்கினார் என்பதை அவர் மூலமாகவே கேட்டுத் தெரிந்துகொள்க" என்பது வகுளாவலிகையின் உட்கருத்தாம். இங்குக் காணப்படும் வேறு பல பாடங்களும் நன்கு பொருந்தாதவை என்றறிக.

அவ்வாறன்று.—இங்கு விதூஷகனது புத்திகூர்மை புகழற்பாலது.

விழுந்தும் தாங்கள் அதனைப் பாராட்டாமல் அவமதித்துச் சென்றதை, அவர் தங்களைக் கண்டவுடனேயே மறந்துவிட்டார். தங்கள் மனமோ இன்னமும் தெளிந்து காணப்படவில்லையே.

இராவதி—நான் கோபமுள்ளவளாயிருப்பினும் என்னால் செய்யக்கூடியது என்ன?

அரசன்—இடமில்லாதபோது கோபம் கொள்வது உனக்குப் பொருந்காது. ஆம். அவ்வாறே—

சிறந்த மேனியாளே, உனது முகம், எப்பொழுதாவது நொடி நேரமேனும் காரணமின்றிக் கோபத்திற்கீடுபட்டதுண்டா? பர்வகாலம் தவிர வேறு இராத்திரியில் சந்திரமண்டலம், கிரஹணத்திற்குட்பட்டு மங்கி நிற்குமோ? சொல்.

இராவதி—"இடமில்லாதபோது" என்று தாங்கள் கூறியது மிகவும் எற்றதே. எனது பாக்கியம் வேறிடம் பாய்ந்திருக்கையில், நான் கோபித்தேனேயாகில், பிறர் எள்ளி நகைக்கத்தான் பாத்திரமாகவேண்டும்.

அரசன்—நீ எனது வார்த்தையைத் திரித்து வேறு பொருட்படுத்துகின்றாய். நானோ, உண்மையாகவே கோபத்திற்கிடமில்லை என்று நினைக்கின்றேன். என்?

---

இராவதி முன்பு செய்த குற்றத்தை எடுத்துச் சொல்லி, அவள் மனம் சிறிது கலங்குமாறு செய்கின்றான் விதூஷகன். அக்குற்றத்தை நினைத்துச் சிறிது திடுக்கிட்டாலும், இராவதி மறுபடியும் முன்போலக் கடுமையாகக் கோபிக்கமுடியாது என்பது விதூஷகனது கருத்து. "நான் முன்பு அவ்வாறு அவமதித்ததின் பயன் இது. ஆதலின் இப்பொழுது முன்போல நான் அவமதிக்கக் கூடாது" என்று இராவதிக்குத் தோன்றுமாறு விதூஷகன் குறிப்பிடுகின்றான். மூன்றும் அங்கம் இறுதிச் செய்யுளில் (இப்பொழுது) அரசன் கூறியதை அவன் நினைக்கும்படி செய்து, அவ்வழியில் மறுமொழி கூறுமாறு விதூஷகன் அரசனைக் குறிப்பால் உணர்த்தித் தூண்டுகின்றான்.

சிறந்த.—மாதரை ராத்திரியோடு ஒப்பிட்டுக் கூறுவது வால்மீகியின் வழக்கு. நமது கவியும் வால்மீகிக்குச் சிஷ்யராகையால் அவ்வாறே கூறுவர். இவ்வுவமையைப் பல விடங்களிலும் காணலாம்.

ஏவலாளர், குற்றம் புரிந்திருப்பினும், விழாக்காலத்தில் அவர்களைத் தண்டிப்பது தகாது என்று நினைத்து, நான் இவர்களை விடுவித்தேன். இவர்களும் என்னை வணங்க இங்கு வந்தனர்.

இராவதி—நிபுணிகே, "தேவியாரின் பக்ஷபாதம் தெரியவந்தது" என்று தேவியாரிடம் போய்ச் சொல்.

நிபுணிகை—அவ்வாறே.

[சென்றள்.

விதூஷகன்—(மனத்துள்) அந்தோ. அனர்த்தம் வந்துவிட்டது. கட்டிப் போடப்பட்டிருந்த வீட்டுப்புறு, பெண் பூனையின் பார்வையில் விழுந்துவிட்டது.

(பிரவேசித்து)

நிபுணிகை—தற்செயலாய்க் காணப்பட்ட மாதவிகை 'இஃது இவ்வாறு நடந்தது' என்று சொன்னாள்.

(காதோடு சொல்லுகின்றள்.)

---

ஏவலாளர்—வகுளாவலிகையின் வார்த்தைக்கும் மதிப்புக் கொடுத்துப் பேசுகின்றன் அரசன். நான்தான் இவளிடம் கருணை காட்டினேன் என்பதால் வகுளாவலிகையின் பேச்சு மதிக்கப்பட்டது. இவளைத் தோழியுடன் சிறையிலிருந்து விடுவித்ததற்குக் காரணம் உத்ஸவ காலமேயன்றி வேறல்ல என்றும், நன்றிபாராட்டவே இவர்கள் வந்தார்கள் என்றும் கூறி, இராவதியின் ஸம்சயத்தையும் கோபத்தையும் போக்க முயல்கின்றன் அரசன்.

நிபுணிகே.—அரசன் தானே இவர்களை விடுவித்ததாகக் கூறினும். இதில் தேவியும் உடன்பட்டிருப்பாளென்று நினைத்து இவ்வாறு வருந்திப் பேசுகின்றள் இராவதி.

அந்தோ.—புறு, கூட்டிலடைக்கப்பட்டிருப்பதால் தன்னைக் காக்கவோ ஓடவோ முடியாமல் பூனைக்கு இறையாகத்தான் வேண்டும். அவ்வாறே மாளவிகையின் கதியுமென்கிறன்.

தற்செயலாய்.—நிபுணிகை அரசியிடம் போய் இவ்விஷயத்தைத் தெரிவித்தால், ஒருகால் அவள் கோபித்து முன்போல மாளவிகையை மறுபடியும் சிறையில் அடைத்துவிடக்கூடும். அசோகம் பூத்த செய்தி தெரிந்தபின் இவ்விஷயத்தை அரசி அறிந்தாலும் ஒருவாறு கோபமு

இராவதி—(மனத்துள்) ஆம். இது பொருந்தும். தாழ்ந்த இவ்வந்தணன்தான் இவ்வாறு சூழ்ச்சி செய்திருக்கவேண்டும். (வெளிப்படையாக, விதூஷகனைப் பார்த்து) இது களவியல் மந்திரியாகிய இவரது நீதியாம்.

விதூஷகன்—அம்மா, நான் நீதியில் ஓரக்ஷரமாவது படித்திருந்தால், காயத்திரிகூட எனக்கு மறந்துபோகக் கடவது.

அரசன்—(மனத்துள்) இந்தத் துன்பத்திலிருந்து நான்விடுதலை பெறுவது எங்ஙனம்?

(பிரவேசித்து)

ஜயஸேனை—பிரபுவே, ராஜகுமாரி வஸுலக்ஷ்மி பந்துவிளையாட்டில் பந்தைப் பின்தொடர்ந்து கொண்டே போக, அவளைச் செங்குரங்கு பயப்படுத்தியது. அதனால் பெரிதும் அச்சம்கொண்ட ராஜகுமாரி, தேவியாரது மடியினுட்கார்ந்துகொண்டு, காற்றில் தளிர் நடுங்குவதைப் போல நடுங்குகின்றாள். இன்னமும் இயற்கை நிலையை அடையவில்லை.

---

தணிந்து மாளவிகையிடம் கருணைகாட்ட இடம் உண்டாகும் என்ற உண்மையை அறிந்த நமது மஹாகவி, நிபுணிகையை அரசியிடம் போகவிடாமல் நடுவழியிலிருந்தே திருப்பிவிடுகிறார். மாளவிகையும் இவ்வாறேயல்லவா நினைக்கின்றாள்.

ஆம்.—"காமதந்த்ரஸசிவஸ்ய" என்பது மூலம். ராஜ்யதந்திரத்தில் மந்திரிமார் இருப்பது போலக் காமதந்திரத்தில் இவர் மந்திரியாயிருக்கின்றார் என்று கோபத்தால் பரிஹஸித்துக் கூறுகின்றாள்.

அம்மா.—ஏதாவதொரு விநோதப்பேச்சுப் பேசி இராவதியைச்சிரிக்கச் செய்து அவளது கோபத்தை மாற்ற முயல்கின்றான் விதூஷகன்.

பிரபுவே.—கதையைத் தொடுத்திருப்பது எவ்வளவு அழகாயிருக்கின்றது. அரசன் தவித்து நிற்குங்கால், அவனை இந்த ஸங்கடத்திலிருந்து விடுவிக்க, மெல்லிய ஒருபாயத்தை மஹாகவி கண்டுபிடித்தார். காளிதாஸரின் இந்தச் செங்குரங்கையே ரத்னாவளி நாடிகையில் தாவகுவி சங்கிலி அறுக இழுத்துக்கொண்டு போய்விட்டான்.

**அரசன்**—ஐயோ. சிறுவயது பயத்திற்கு இருப்பிடமன்றோ.

**இராவதி**—(பாபரப்புடன்) குழக்தையைத் தேற்ற ஐயர் விரைந்து செல்லவேண்டும். திகிலால் ஏற்பட்டிருக்கும் மனத் தடுமாற்றத்தை வளரவிடக்கூடாது.

**அரசன்**—இதோ சென்று குழந்தையைத் தேற்றுகின்றேன்.

[வேகமாக நடக்கின்றான்.

**விதூஷகன்**—நன்று செங்குரங்கே, நன்று. உன் நண்பனைக் கஷ்டத்திலிருந்து நன்கு காப்பாற்றினாய்.

[தோழனுடன் அரசனும், இராவதியும், நிபுணிகையும், வேலைக்காரியும் செல்கின்றனர்.

**மாளவிகை**—தோழி, தேவியாரை எண்ணி என்மனம் பதைக்கின்றது. இப்பொழுது இதற்குமேல் என்ன அனுபவிக்க வேண்டுமோ? தெரியாது.

(திரையினுள்)

ஆச்சரியம், ஆச்சரியம். வளம் கொடுத்து ஐந்து நாளாவதற்குள்ளேயே ஸுவர்ணசோகமரம் நிறைய மொட்டுக்கட்டிவிட்டதே! இதனைத் தேவியாரிடம் தெரிவிக்கப்போகின்றேன்.

(இருவரும் கேட்டு மகிழ்கின்றனர்.)

**வகுளாவலிகை**—என் அருமைத் தோழி நீ மனம் தேறியிருக்கலாம். தேவியார் தாம் கூறிய வார்த்தையில் கடைப்பிடியுள்ளவர்.

---

குழந்தைபய.—நமது கவி நினைத்தவண்ணமே இந்தப் பரபரப்பில் இராவதி தன் கோபத்தையே மறந்துவிட்டாள்.

நன்று.—"பரித்ராதஸ்த்வயா ஸங்கடாத் ஸபக்ஷ:" என்பது மூலம், ஸபக்ஷன் என்றால் ஒரே பக்ஷமுடையவன், அதாவது நண்பன் என்பது பொருள். குரங்குபோலச் சாபல்யம் காட்டுவதால் அரசனையே இவ்வாறு பரிஹாஸமாகக் கூறினான் எனக் கொள்க. அல்லது தன்னையே இவ்வாறு பரிஹாஸமாகக் கூறிக்கொண்டான் எனக் கொள்ளலுமாம்.

ஆச்சரியம்.—தேவியாரை நினைத்துப் பயந்து தவிக்கும் மாளவிகைக்கு இந்தச் செய்தி அமுததாரையாயிராதோ? அக்கினியில் விழுந்த மாளவிகை இப்பொழுது அம்ருதஸரஸ்ஸிலிருந்தெழுந்திருக்கிறாள்.

**மாளவிகை**—எனவே, நாம் ப்ரமதவனம் காப்போள் சென்ற பின் செல்வோம்.

**வகுளாவலிகை**—அவ்வாறே.

[எல்லாரும் சென்றனர்.

நான்காம் அங்கம் முற்றிற்று.

---

# ஐந்தாம் அங்கம்.

---

(பிறகு உத்தியானம் காப்பவள் பிரவேசிக்கின்றாள்.)

**உத்தியா-வள்**— நான், தேவியாரின் கட்டளைப்படி ஸுவர்ண அசோக மரத்திற்குச் செய்யவேண்டிய வழிபாடுகளைச் செய்து, பிறகு அம்மரத்தினடியில் மேடை அமைத்து விட்டேன். இதனைத் தேவியாரிடம் தெரிவிக்கப் போகின்றேன். (நடந்து) ஆ. ஆ. தெய்வம் மாளவிகைமீது இரக்கம் காட்டியது. தேவியார் முன்பு அவ்வாறு கோப மூட்டப்பட்டிருந்தாலும், இவ்வசோகம் பூத்த செய்தியைக் கேட்பின், இப்பொழுது மாளவிகையிடம் கருணை காட்டுவாரன்றோ. இப்பொழுது தேவியார் எங்கிருக்கக் கூடும்? (பார்த்து) ஓ தேவியாரின் ஏவலாளருள் ஒருவனாகிய ஸாரகன் என்ற கூனன், அரக்கு முத்திரையிடப்பட்ட மூடிப்பொன்றைக் கையிலெடுத்துக்கொண்டு நாற்கட்டு வீட்டிலிருந்துப் புறப்பட்டு வருகின்றான். இவனையே கேட்கலாம்.

(பிறகு முற்கூறியபடி ஸாரகன் பிரவேசிக்கின்றான்.)

**உத்தி-வள்**—(அடுத்துச் சென்று)ஸாரக, எங்கே புறப்பட்டாய்?

**ஸாரகன்**—மதுகரிகே, வேதம் வல்லுநரான அந்தணர்களுக்கு

---

நரீ்வ்.—"க்ருதஸத்காரவிதே:" என்பது மூலம். ஸத்காரமாவது பூத்தவுடன் செய்யவேண்டிய வழிபாடு. முன் கொடுத்த வளமே ஸத்காரம் என்பர் சிலர். "ஸீவிரபந்தம்" என்பது வடசொல். சீவரமென்ற

நித்ய தக்ஷிணை கொடுக்கவேண்டும். அதற்காக இந்தப் பணமுடிப்பைப் புரோஹிதர் கையில் கொடுக்கப்போகின்றேன்.

**மதுகரிகை**—என்ன காரணம்?

**ஸாரகன்**—ஸேநாபதி, ராஜகுமாரர் வஸுமித்திரரை, யாகக் குதிரையைக் காப்பாற்ற அனுப்பியிருக்கின்றார் என்ற செய்தியைக் கேட்டதுமுதல், அவர் நீண்ட ஆயுளை அடையவேண்டுமெனக்கருதி தேவியார், சிறந்த அந்தணர்களுக்குத் தினந்தோறும் பதினெட்டு ஸுவர்ணம் தக்ஷிணையாகக் கொடுத்துவருகின்றார்.

**மதுகரிகை**—இப்பொழுது தேவியார் எங்கு இருக்கின்றார், என்ன செய்கின்றார்?

**ஸாரகன்**—மங்களகிருஹத்தில் ஆஸனத்தில் அமர்ந்து, ஸஹோதரன் வீரஸேனன் விதர்ப்பதேசத்திலிருந்து அனுப்பிய பத்திரிகையைக் கணக்கர் படிக்கக் கேட்டுக்கொண்டிருக்கின்றார்.

**மதுகரிகை**—விதர்ப்பநாட்டரசன் செய்தி என்ன?

**ஸாரகன்**—வீரஸேனனைத் தலைவனாகக் கொண்ட நம் பிரபுவின் வெற்றிப்படை, விதர்ப்ப நாட்டானைப் பிடித்துவிட்ட

---

பதம் ஸன்னியாஸியின் கிழிந்த வஸ்திரத்தைக் கூறுமாயினும் இங்கு வஸ்திரம் என்ற பொருளில் அதனைக் கொள்ளவேண்டும். "மஞ்ஜூஷிகா" என்ற பாடமுமுண்டு. மஞ்சுஷிகை என்பது மஞ்சட்பெட்டியாம். "சதுச்சாலம்" என்ற வடமொழிக்கு நான்கு தாழ்வாரமும் நடுவில் இடமுமுள்ள வீடு எனப்பொருள் கூறுவர்.

ஸேனாபதி.—80 குந்துமணி அல்லது 2½ விராகனிடை அளவுள்ள தங்கம் ஸுவர்ணம் எனப்படும்.

மங்கள.—மங்களகிருஹமாவது மங்களமான காரியத்தைக் கேட்பதற்குள்ள இடம். கைகேயியின் கோபகிருஹம் பிரஸித்தமானதன்றோ. 'லிபிகரா:" என்பது வடசொல். இப்பொழுது "குமாஸ்தா" என்று வழங்கப்படுகிற கணக்கர் லிபிகராவர். லிபிகர என்ற பதத்திற்குநேரான பொருள் எழுத்தெழுதுபவர் என்பதாம். தமிழில் எழுத்தாளர் என்ப. இங்குப் பன்மை பஹுமானத்தைப் பற்றியதாம். ஒன்றைப் பலரும் ஒரேஸமயத்தில் வாசிப்பது, இயலாததும் அனாவசியகமானதுமல்லவா?

தாம். அவன் தாயாதியான மாதவஸேனரும் சிறையிலி ருந்து விடுவிக்கப்பட்டாராம். அவர், நமது பிரபுவைக் காணத் தூதனொருவனையும், அவனுடன் கையுறையாகச் சிறந்த ரத்தினங்களையும் தேர் யானை முதலியவற்றையும் கலைகளில் பயின்ற பாவையர் பலருள்ள பணியாளர்களையும் அனுப்பியிருக்கின்றார். நாளைய தினம் நம் பிரபு அத்தூத னுக்குக் காட்சி தரப்போகின்றாராம்.

மதுகரிகை—ஸாரக, உனக்கிட்ட கட்டளையை நிறைவேற்றப் போ. நானும் தேவியாரைக் காணச் செல்கின்றேன்.

[இருவரும் சென்றனர்.

ப்ரவேசகம் முற்றிற்று.

---

(பிறகு வாயிற்காப்பவள் பிரவேசிக்கின்றாள்.)

வாயிற்காப்பவள்—அடி, "அசோகமரம் பூத்துநிற்கும் சீர் மையை நான் ஐயருடன் சேர்ந்து காணவிரும்புகின்றேன்" என்று ஐயரிடம் விண்ணப்பம் செய் என்று தேவியார் எனக்குக் கட்டளையிட்டிருக்கின்றார். ஆகையால் பிரபு தர்மாஸனத்திலிருந்து எழுந்து வருவதை எதிர்பார்த்து நிற்கின்றேன்.

[நடக்கின்றாள்.

(திரையினுள்)

இரு வைதாளிகர்—பிரபுவே, பாக்கியம் நிறைந்த தாங்கள், தண்டோபாயங்கொண்டே பகைவர் தலைமீதிருக்கின்றீர் கள்.

முதலாமவன்—தாங்கள், குயில்கள் இன்னிசைபாடும் விதி சைக் கரைப் பூங்காக்களில் மன்மதனே உருவமெடுத்து வந்தாற்போல ரதியுடன் வந்தமர்ந்து வஸந்த காலத்தைக் கழிக்கின்றீர்கள். ஏ வள்ளலே, தாங்கள் அனுப்பிய படையி

---

பிரபுவே—'திஷ்ட்யா தண்டேநைவ அரிசிரஸ்ஸு வர்ததே தேவ:' என்பது மூலம். தண்டமாவது ஸாமம் தானம் பேதம் தண்டம் (இன் சொல் வழங்கல், பொருள் கொடுத்தல், வேறு படுத்தல், ஒறுத்தல்) என்ற நான்கு உபாயங்களுள் சிக்ஷித்தல் என்ற நான்காமுபாயமாம்.

தாங்கள்.— "விதிசாதீரோத்யானேஷு" என்பது வடசொல்

லுள்ள வெற்றி யானைகள், வரதையாற்றங்கரையிலுள்ள மரங்களில் கட்டப்பட்டு அவற்றை வலித்திழுக்கவே, அப்பொழுது அம் மரங்கள் வணங்க அவற்றுடன் பகைவனும் வணங்கி விட்டான்.

*இரண்டாமவன்*—தேவர்களைப் போன்றவரே, இப்பொழுது தாங்கள் வெற்றிப்படைகளை அனுப்பி விதர்ப்ப நாட்டரசனது ஸ்ரீயைக் கைப்பற்றிய செய்தியையும், முன்பு ஸ்ரீ கிருஷ்ணன் இருப்புலக்கைகளை யொத்த கைகளால் ருக்மணியை வலுவிலேற்றுக்கொண்ட விஷயத்தையும் புலவர்கள் வீரரிடமுள்ள பிரீதியால் பாட்டிலிசைக்க, இவ்விசைப் பாட்டுக்களிரண்டும் இப்பொழுது விதர்ப்பதேசம் முழுதும் பரவியிருக்கின்றன.

---

விதிசைப்பட்டணத்தின் எல்லைப்புறத்திலுள்ள பூந்தோட்டங்கள் எனப் பொருள் கொள்க. பட்டணத்தின் எல்லைப்புறத்தில் பூந்தோட்டங்களிருப்பதாக வர்ணிப்பதுண்டு. இவற்றை நகரோத்யானங்கள் என்றும் வழங்குவர். விதிசை நகர் நதிபோல் நீண்டகன்றிருப்பதை எண்ணி அதன் எல்லையைக் கரை என்றார் கவிராயர். "விதிசைப்பட்டணத்தினருகு ஓடும் வேத்ரவதி நதியின் கரையிலுள்ள தோட்டங்கள்" என்று சிலரும், "விதிசை என்ற நதியின் கரையிலுள்ள தோட்டங்கள்" என்று வேறு சிலரும் உரை எழுதுகின்றனர். ரதி என்ற பதத்திற்கு, ஸந்தோஷம், மன்மதன் பத்தினியாகிய ரதிதேவி என்ற இரு பொருள்களையும் இங்குக் கொள்ளவேண்டும். மன்மதபக்ஷத்தில் "நயவி" என்ற வட சொல்லுக்கு "கூட அழைத்துக்கொண்டு போகின்றான்" என்பது பொருள். அணி உத்ப்ரேக்ஷையாம். பெரிய மரங்களை அடியோடும் சாய்க்கும் வலிமையுள்ள யானைகளைப் பார்த்தவுடன் பகைவன் மனங்கலங்கிப் பணிந்துவிட்டான் என்பது கருத்து. அரசன் கவலையற்றுப் பூந்தோட்டங்களில் விளையாட, இவனது படையே பகைவனை வென்றுவிடுகிறது என்று வாழ்த்துகின்றான் வைதாளிகன். இங்கு ரகுவம்சம் நான்காம் ஸர்க்கத்திலுள்ள "கஜாலானபரிக்லிஷ்டைரக்ஷோடை: ஸார்த்தமானதா:" என்ற செய்யுள் நினைக்கற்பாலது.

தேவர்களை.—"வீரப்ரீத்யா" என்ற மூலத்தில் "வீர" என்பதைத் தனிப்பதமாக்கி ஸம்போதனமாகக் கூறலுமாம். "ஸுரோபம" என்ற ஸம்போதனம், ஸ்ரீகிருஷ்ணனோடு உவமை கூற யோக்கியதையை வெளிப்படுத்துகின்றது. விதர்ப்ப நாட்டானின் ஸ்ரீயை அபஹரித்தான் என்பதால் இவன் தர்மவிஜயி என்பது தெரிவிக்கப்பட்டது.

**வாயிற்கா**—கட்டியக்காரர் ஜயத்தொனி செய்ய, அரசர் புறப்பட்டு இப்பக்கமாகவே வருகின்றார். நானும் அரசருக்கு எதிரில் நிற்காமல் சிறிது அகன்று, இதோ வெளித்தாழ்வாரத்தின் முகப்பிலிருக்கின்றேன்.

[தனித்திருக்கின்றாள்.

(பிறகு அரசன் தோழனுடன் பிரவேசிக்கின்றான்.)

**அரசன்**—எனதன்பிற்குரிய மாளவிகையை அடைவது எளிதல்ல என்பதை நினைத்தும் எனது படைகள் விதர்ப்ப நாட்டானைப் பிடித்துவிட்டன என்பதைக் கேட்டும் என் மனம், வெயிலில் மழையால் தாக்கப்படும் தாமரைப் பூவைப்போலத் *துக்கத்தையும் ஸுகத்தையும் ஒருங்கே நுகருகின்றது.

**விதூஷகன்**— தாங்கள் துக்கம் கலவாத ஸுகத்தையே அடையப் போகிறீர்கள் என்று எனக்குத் தோன்றுகின்றது.

**அரசன்**—எங்ஙனம்?

**விதூஷகன்**—"பகவதி, அலங்காரம் செய்வதில் சிறந்த திறமை தங்களுக்கிருப்பதாகத் தாங்கள் பெருமை பாராட்டுவதாயின், இன்று இந்த மாளவிகைக்கு விதர்ப்பதேசத்திய மணக்கோலத்தைச் செய்து காட்டுங்கள்" என்று தேவியார் பண்டித கௌசிகியிடம் சொன்னார். கௌசிகியும் அவ்வாறே சிறப்பாக மாளவிகைக்கு அலங்காரம் செய்

---

தர்மவிஜயி முதலிய பிரிவுகளைப் பற்றி ரகு வம்சக்குறிப்பில் விரிவாய் எழுதுவோம். "ஸ தர்மவிஜயீ ந்ருப: ச்ரியம் மஹேந்த்ரநாதஸ்ய ஜஹார நது மேதினீம் என்ற ரகுவம்சச் செய்யுள் இங்கு நினைக்கற்பாலது. இங்குள்ள உவமையால் ஸ்ரீகிருஷ்ணனுக்குப் பிறகு விதர்ப்பதேசத்தில் அரிய வீரச்செயலைக் காட்டியவன் அக்கினிமித்திரன் தான் என்பது பெறப்பட்டது. இந்த நாடகத்தின் நாயகனை ஸ்ரீகிருஷ்ணனுடைய ஸ்தானத்தில் வைத்துப்பார்க்கின்றார் நமது மஹாகவி என்று முன்னரே கூறியிருக்கின்றோம். வைதாளிகர்களுடைய இவ்விருசெய்யுள்களும் அரசனது வீரச்செயலைப் புகழ்ந்து கூறுவனவாயினும், உத்தியானத்தில் அரசனுக்கு நேரப்போகும் விவாஹமஹோத்ஸவத்தையும் நன்கு தொனிப்பிக்கின்றன எனக் கண்டு மகிழ்க.

திருக்கின்றாள். ஆகையால் தேவியார் தங்களெண்ணத்தை ஒருகால் நிறைவேற்றக்கூடும்.

அரசன்— தாரிணியின் முன்னைச் செயல்களை நினைத்தால் அவள் எனது விருப்பத்தைத் தழுவி அஸூயையைவிட்டு இவ்வாறு செய்யக்கூடுமென்றே எனக்குத் தோன்றுகின்றது.

வா-ள்—பிரபு ஓங்கி வாழ்க. "ஸ்வர்ண அசோகமரம் வளமேற்றுப் பூத்து நிற்பதைத் தாங்கள் நேரில்வந்து பார்த்து எனது முயற்சியைப் பயன்படச் செய்யவேண்டும்"என்று தேவியார் விஜ்ஞாபிக்கின்றார்.

அரசன்—அங்குத் தானோ இருக்கின்றார் தேவியார்?

வா-ள்—ஆம். தேவியார், அந்தப் புரத்தினரை அவரவர்க்குரியவாறு பரிசளித்து அனுப்பிவிட்டு, மாளவிகை முதலிய தமது பரிஜனங்களுடன் தங்களுடைய வரவை எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றார்.

அரசன்—(ஸந்தோஷத்துடன் விதூஷகனைப் பார்த்துவிட்டு) ஜயஸேனே, முன் செல்.

---

தாரிணியின்.—"எவ்விதத்திலும் என்மனத் திருப்தியையே முக்கியமாகக் கருதுபவள் தாரிணி என்பதைப் பலவாற்றானும் பரிசயமுள்ள நான் அறிவேன். இதற்கு இராவதியே தக்க சான்றன்றோ" என்கிறான் அரசன். "மாளவிகையைச் சிறையிலிருந்து அரசன் விடுவித்தும் அவன் மீது தாரிணி கோபங்கொள்ளாதிருப்பதை இங்கு அவளுடைய முன் செய்கையாகக் கொள்ளல் வேண்டும்" என்பர் சிலர்.

பிரபு.—மாளவிகையை அரசருக்குக் கொடுப்பதுதான் இங்கு அரசியின் முக்கிய முயற்சியாம். அது நிறைவேற அரசன் வரவேண்டுமன்றோ.

ஆம்.—இராவதி முதலிய அந்தப் புரத்தினருக்குத் தக்கவாறு பரிசளிக்கக் காரணம், அசோகம் பூத்தபோதுள்ள கொண்டாட்டமாம். இது விவாஹ காலத்தில் இஷ்டமித்திரர்களுக்குச் செய்யும் பரிசளிப்பாகவுமாம். இஃது அரசியின் உட்கருத்தாயிருக்கலாம்.

ஸந்தோஷத்துடன்.—அரசனது பார்வை "நீ சொன்னது உண்மையாயிற்று" என்று விதூஷகனை உணர்த்துகின்றது.

**வா-ள்**—பிரபு இங்கு வரவேண்டும், இங்கு வரவேண்டும்.

(எல்லாரும் செல்கின்றனர்.)

**விதூஷகன்**—(பார்த்து) தோழ, பூங்காவில் வஸந்த ருதுவின் யௌவனம் மாறியதாகத் தெரிகிறது.

**அரசன்**—ஆம். நீ சொன்னபடி தான்;

குரவகப் பூக்கள் உதிர்ந்து இதோ முன்புறம் சிதறிக் கிடக்கின்றன. தேமாமரங்கள் பழம் நிறைந்து நிற்கின்றன. இவ்வாறு வஸந்த ருதுவின் யௌவனப் பருவம் முடிவடையுந் தறுவாயிலிருக்கின்றதைக் கண்டு என் மனம் கவல்கின்றது.

**விதூஷகன்**—(நடந்து) ஆச்சரியம். இதோ ஸுவர்ண அசோகம், பூங்கொத்து நிறைந்து கோலங்கொண்டது போல நிற்கின்றது. இதனைப் பாருங்கள்.

**அரசன்**—இப்பொழுது இந்த அசோகமரம், மற்றவைக்கில்லாத தனித்ததொரு காந்தியைப் பெற்று விளங்குவதை எண்ணுங்கால், முன்பு இது பூப்பதில் காலம் தாழ்த்தியது உசிதமென்றே நான் நினைக்கின்றேன். பார்—

முன்னதாக வஸந்த ருதுவின் மஹிமையை உணர்த்திய மற்றை அசோகமரங்களெல்லாவற்றினுடைய பூக்களும், வளமேந்திய இந்த மரத்தில் பாய்ந்துவிட்டன போலும்.

---

குரவக.—குரவக மரங்களில் அதிகமிராமல் பூக்கள் பூமியில் உதிர்ந்து விழுந்திருப்பதும், மாமரங்களில் கனிகள்நிறைந்திருப்பதும் வஸந்த ருதுவின் முடிவு காலத்திற்கு அறிகுறிகளாம். "இந்த வஸந்தருது முடிவடையப் போகின்றதே. இந்த ருதுவில் மாளவிகையை அடைந்தாலன்றோ இச்சைப்படி இன்பத்தை அனுபவிக்கலாம்" என்று என்மனம் கவன்று கலங்கின்றது" என்கிறான் அரசன். "இவ்வாறுள்ள வஸந்தருது எனக்கு மன்மததாபத்தை உண்டு பண்ணுகின்றது" என்பது ஒருவருரை. "குரவகப் பூக்கள் பூமியில் விழுந்தன என்பதால் பகைவர் பணிந்துபோயினர் என்பதும், மாமரங்கள் பழம் நிறைந்து நிற்கின்றன என்பதால் பற்பல பயன்களும் இனிக் கிடைக்கப் போகின்றன என்பதும் இங்கு தொனிக்கின்றன" என்பர்.

முன்னதாக.—அரசனுடைய முன் வாக்கியமும் இந்தச் செய்யுளும்

விதூஷகன்—ஏ, கவலையை விடுக. நாம் அடுத்துவர்தும், தேவியார், தமது ஸமீபத்தில் மாளவிகை இருக்க ஸம் மதித்திருக்கின்றார்.

அரசன்—(ஸந்தோஷத்துடன்) தோழ, பார்—

இதோ தேவி என்னை உபசரிக்கக் கருதி எழ, அவளைப் பின்பற்றி என் பிரியையான மாளவிகையும் வணக்கத்துடன் எழுவது, பூமி எழ, தாமரைப் பூவைக் கையிலெடுக்க மறந்த ராஜலக்ஷ்மி அன்னவளைத் தொடர்ந்து எழுவதை யொத்திருக் கின்றது.

(பிறகு அரசியும், மாளவிகையும், பிக்ஷுணியும், நிலைமைக்குத் தகுந்தவாறு பரிஜனங்களும் பிரவேசிக்கின்றனர்.)

மாளவிகை—(மனத்துள்) இந்த மணக்கோலத்திற்குள்ள காரணத்தை நான் அறிவேன். ஆயினும், தாமரையிலையிலுள்ள நீரைப்போல என் மனம் தத்தளிக்கின்றது. எனது இடது கண்ணோ அடிக்கடி துடிக்கின்றது.

விதூஷகன்—தோழ, மதிக்கத் தக்க மாளவிகை, இப்பொழுது இம்மணக் கோலத்தால் சிறந்து விளங்குகின்றாள்.

அரசன்—ஆம். இவளைக் காண்கின்றேன்.

---

தனித்தொரு கார்த்திகை ஏற்று, இரண்டாமங்கம் முடிவில் அரசன் கூறியபடி அவனது அன்பு முழுவதையும் பெற்று விளங்கும் மாளவிகையை இவ்வசோக மரத்தோடு ஒப்பிட்டுப் பார்க்க நம்மைத் தூண்டுகின்றன. பூக்காத ஸமயத்தில் தன்னோடு இந்த அசோகமரத்தை உவமித்துக் கூறிய மாளவிகையின் வாக்கியமும் இங்கு நினைக்கற்பாலது.

இதோ.—பட்டமஹிஷியைப் பூமியோடு ஒப்பிட்டுக் கூறுவது நமது கவியின் வழக்கம். இந்த உவமையால், மாளவிகையை அடையாவிடின் அரசனது செல்வமும் நிலைமையும் சிறப்பைப் பெறமாட்டா என்பது தொனிக்கின்றது. ராஜலக்ஷ்மிக்கு "தாமரைப் பூவைக் கையிலெடுக்க மறந்த" என்ற அடைமொழி கொடுத்திருப்பது, "மாளவிகை ராஜலக்ஷ்மியே" என்று வலியுறுத்துகின்றது.

இந்த.—சுபசகுனமாகக் கண் கை தொடை இவைகள் துடிப்பதை எழுதுவதில் நமது கவிக்கு விசேஷமான பற்றுதலுண்டு.

அதிகம் தாழ்ந்து தொங்காதபடி வெண் பட்டாடை உடுத்து, ஆபரணங்களைக் குறைவாகவே அணிந்து விளங்கும் இவள், நிலாவெழும்பொழுது பனி விலகிய நக்ஷத்திரங்கள் குறைந்து துலங்கும் சித்திரை மாதத்து இராத்திரி என எனக்குத் தோன்றுகின்றாள்.

**அரசி**—(அருகு சென்று) ஐயர் ஓங்கி வாழ்க.

**விதூஷகன்**—தேவியார் சிறப்புற்று வாழ்க.

**பிக்குணி**—பிரபு மேன்மை பெறுக.

**அரசன்**—பகவதி, அடிபணிகின்றேன்.

**பிக்குணி**—விருப்பம் கைகூடுமாக.

---

**அதிகம்.**—ராத்திரியோடு மங்கையரை உவமிப்பது நமது மஹாகவியின் வழக்கமென்று முன்னரே கூறியுள்ளோம். வஸந்தருதுவை மனத்தில் நினைத்து சித்திரை மாதத்து இரவு என்றார். சந்திரோதய காலத்தில் நிலாவின் ஒளி மேற்பாகத்திலேயே பரவிக் காண்பதை முன்னிட்டு, அப்போதைய இரவை உவமானமாகக் கூறினார். ஆபரணங்களுக்கு அடைமொழியாகக் கொடுக்கப்பட்டிருக்கும் "லகுபி:" என்ற வடசொல்லுக்கு "குறைந்த" என்பது பொருள். ஒளியுடன் விளங்கும் ஆபரணங்களுக்கு உவமானமாகக் கூறுவதற்காக நக்ஷத்திரங்களைப் "பனி நீங்கிய" என்று விசேஷிப்பித்தார். நிலாக் காலத்தில் நக்ஷத்திரங்கள் குறைந்திருப்பதை நாம் அநுபவத்தில் காண்கிறோம். இக் கருத்தை "பூயஸ்தராணி யதுடூநி தமஸ்விநீஷு..." என்ற முராரி பத்யத்திலும் காண்க. பிக்குணியின் கட்டளைப்படி கணதாஸன் ஆபரணங்களை அதிகம் பூட்டாமல் அழைத்து வந்த மாளவிகையை முதன் முதலாக அரங்க மேடையில் அரசன் கண்ணுற்றதைப் பின்பற்றி, மாளவிகையின் ஒவ்வொரு உறுப்பையும் அரசன் நன்கு காண இங்கு விவாஹகாலத்திலும் ஆபரணங்களைக் குறைத்தே அவளை அவன் கண்ணுக்கெதிரில் நிறுத்துகின்றார் மஹாகவி. இங்கு "பஹுபி: ஆபரணை:" என்ற பாடமும், "லகுபி:" என்ற பதத்திற்கு "அழகிய" என்ற உரையும் நன்கு பொருந்தாதன என்று விடுக. "உதயோன்முக சந்த்ரிகா" என்ற வடமொழிக்கு "உதய பர்வத்தில் தோன்றிய—பூமியில் பரவாத நிலாவோடு கூடிய" என்று ஒருவர் உரை எழுதுகின்றார்!

**விருப்பம்.**—இம்மொழி பொதுவாக விருப்பினும் உண்மையில் இங்கு மாளவிகையின் விவாஹத்தைக் குறிக்கின்றது,

**அரசி**—(புன்னகையுடன்) ஐயனே, இந்த அசோக மரத்தைத் தாங்கள் தையலாருடன் கூடியிருக்க ஸங்கேத ஸ்தலமாக நாங்கள் ஏற்படுத்தியிருக்கின்றோம்.

**விதூஷகன்**—ஏ, தேவியார், பெருமைப் படுத்திவிட்டார்.

**அரசன்**—(வெட்கத்துடன் அசோகமரத்தைச் சுற்றி நடந்து)

தேவி, இவ்வசோகம் வஸந்த லக்ஷ்மியின் ஆணையைப் புறக்கணித்திருந்தும், உனது முயற்சியில் ஆதரத்தைக் காட்டிக்கொண்டு இப்பொழுது பூத்து விளங்குகின்றது. ஆகையால், இஃது, உன்னுடைய இத்தகைய வெகுமதிகளைப் பெற எவ்வாற்றானும் உரிமையுறாததன்று.

**விதூஷகன்**—ஏ, இதோ யௌவநத்துடன் நிற்பதைக் கவலை யற்றுக் காண்க.

---

ஐயனே.—ஸங்கேத ஸ்தலமாவது—இன்ன இடத்தில் நாம் சேருவோம் என்று ஏற்படுத்துமிடம். அரசி, தன்னையும் சேர்த்துக் கூறுகின்றாளாயினும், "முன்பு தாங்கள் இந்த அசோக மரத்தினடியிலேயே மாளவிகைக் கண்டு கூலாவியதால், இதனையே உங்களிருவர்க்கும் ஸங்கேத ஸ்தலமாகச் செய்ய விரும்புகிறேன்" என்ற கருத்தைத் தொனிப்பிக்கின்றாள்.

ஏ தேவியார்.—"போ ஆராதிதோஸி" என்பது மூலம். ஆராதித்தலாவது—இஷ்டப்படி நடந்து திருப்தியுறச் செய்தல். "ஸகே" என்று அழையாமல் "போ:" என்றழைத்திருப்பது, இஃது அசோகத்திற்கும் சேருமாறு பொருந்தி நிற்பதற்காகவேயாம். இப்படிப் பொருந்தக் கூறியது, அரசி, ஒருகால் கடிந்து மொழிந்தால் தான் அசோகத்தைப் புகவிட்டு மறுமொழிகூறி ஸமாதானப் படுத்தலாமெனக் கருதிச் செய்த ஒரு தந்திரச் செயலாம்.

தேவி.— முன்பு தானுக மாளவிகையைக் கைக்கொள்ளாமல், இப்பொழுது சொள்ளப்போகும் சோகம் நீக்கிய அரசனை, முன்னர் காட்டியபடி இவ்வசோகமரத்தோடு இப்பொழுதும் ஒத்திட்டுப் பார்ப்பது விரும்பற்பாலது.

ஏ, இதோ.—"போ விஸ்ரப்தோ பூத்வா இமாம் யௌவனவதீம் பச்ய" என்பது மூலம். அரசி "காம்" என்று உறுத்தி வினவியபோது "தபநீயாசோகஸ்ய குஸுமசோபாம்" என்று மறுமொழி கூறுகின்றான்

*அரசி*—என்ன?

**விதூஷகன்**—ஸுவர்ண அசோக மரத்துப் புஷ்பசோபை பருவத்திலிருக்கின்றது.

(எல்லாரும் உட்காருகின்றனர்.)

*அரசன்*—(மாளவிகையைப் பார்த்து, மனத்துள்) அந்தோ. அருகு வந்தும் பிரிந்திருப்பது வருந்தற்பாலது.

நான் ஆண் சக்கரவாகப் பக்ஷியைப் போலிருக்கின்றேன். என் அன்பிற்குரியாளோ பெண் சக்கரவாகப்புள்ளையொத்திருக்கின்றாள். நாங்களிருவரும் சேர அனுமதி தராத தாரிணி இரவுக் கொப்பாகின்றாள்.

(பிரவேசித்து.)

---

விதூஷகன். வடமொழியில் லிங்கம் (பால்) சப்தத்தைப் பற்றி நிற்பதால், "இமாம்" "யௌவனவதீம்" "காம்" என்ற ஸ்திரீ லிங்க பதம் (பெண்பாற்சொல்) மாளவிகைக்கும் குஸுமசோபைக்கும் பொதுவாக நிற்கின்றது. ஆகையால் மூலத்தில் இங்கு ஒரு சமத்காரம் எளிதிற் காட்டப்பட்டிருக்கிறது. பதங்களுக்கு நேரான மொழிபெயர்ப்பைக் கைக்கொண்டு "யௌவநமுள்ள இதனைப்பார்" என்றால் இது மாளவிகையைச் சாராது, "இவளைப்பார்" என்றால் இது குஸுமசோபையோடு சேராது. ஆதலின் நாம் கருத்தைத் தழுவி இரண்டும் பொருந்த மொழி பெயர்த்தோம்.

என்ன.—"காம்" என்பது மூலம். விதூஷகன் மாளவிகையைக் குறித்தே இவ்வாறு கூறுகின்றானென்பதை அரசி அறிவாளாயினும், அறியாதவள்போல் வினவுகிறாள். "காம்" என்பதை "எவளை" என்றோ எதனை என்றோ மொழிபெயர்த்தால் முன் காட்டியபடி இருவிதமாக இதனைப் பொருத்தமுடியாதாதலின் கருத்தைத் தழுவி "என்ன" என்று மொழிபெயர்த்தோம்.

ஸுவர்ண.—"என்ன" என்ற வினாவுக்குத் தக்கபடி இங்கும் கருத்தைத் தழுவியே மொழிபெயர்த்தோம்.

அந்தோ.—"கஷ்டம் கலு மமாத்ய ஸன்னிதி விப்ரயோக:" என்பது மூலம். இங்குப் பிரிவாவது அங்கஸ்பர்சம் முதலியவையில்லாமை.

நான்.—தாரிணியை ராத்திரிக்கொப்பாக்கி அதனை இந்த ஸந்தர்ப்பத்துக் கேற்றவாறு கூறியிருப்பதன் அழகைக் காண்க.

கஞ்சுகி—பிரபு, ஓங்கி வாழ்க. "விதர்ப்ப நாட்டரசர் கையுறையாக வழங்கிய பலவற்றுடன் இரு நாட்டியப் பெண்களையும் வழங்கியிருக்கின்றார். அவர்கள் வழிநடந்து களைத்திருந்தமையால், பிரபுவின் ஸன்னிதானத்திற்கு அவர்களை அனுப்பவில்லை. இப்பொழுது அனுப்பக்கூடிய நிலைமையிலிருக்கின்றார்கள். ஆதலின் பிரபு ஆஜ்ஞை தந்தருளவேண்டும்." என்று அமைச்சர் விண்ணப்பம் செய்கின்றார்.

அரசன்—அவர்களை அழைத்து வா.

கஞ்சுகி—கட்டளைப்படியே. (வெளிச் சென்று அவர்களை கூட்டிக் கொண்டு வந்து) இவ்வழியாக வாருங்கள்.

முதலாமவள்—(ரஹஸ்யமாக) தோழி ரஜனிகே, இவ்வரண்மனையில் நாம் புதிதாக நுழையினும், எனது மனம் தெளிவுறுகின்றது.

இரண்டாமவள்—ஜ்யோத்ஸ்னிகே, எனக்கும் இவ்வாறே. "ஸுகமோ துக்கமோ வரப்போவதை மனம் முன்னரே அறிவித்து விடுகின்றது" என்பது பழமொழியன்றோ.

முதலாமவள்—அப்பழமொழி இப்பொழுது உண்மையாகுமாக.

கஞ்சுகி—இதோ பிரபு தேவியாருடன் வீற்றிருக்கின்றார். நீங்கள் அருகு செல்லுக.

(இருவரும் அடுத்துச் செல்கின்றனர். இவ்விரு பெண்களையும் பார்த்துவிட்டு மாளவிகையும் பிக்ஷுணியும் ஒருவரை ஒருவர் நோக்கின்றனர்.)

---

பிரபு.—"சில்பதாரிகே" என்பது மூலம். கலைபயின்ற சிறுமிகள் என்பது அதன்பொருள். நமது மஹாகவி, இந்த ஸந்தர்ப்பத்தில் இவ்விருவரையும் வரவழைத்திருப்பதையும், இதற்குமுன் வாராததற்கு நன்கு பொருந்தும் காரணமொன்றைக் கூறியிருப்பதையும், இப்பொழுது வரவழைத்ததன் பயனையும் ஆராய்ந்து பார்த்து மகிழ்க.

தோழி.—சாகுந்தளத்தில், துஷ்யந்தன் அரண்மனைக்குள் நுழைந்தபோது சார்ங்கரவனுக்கும் சாரத்வதனுக்கும் மனத்தில் தோன்றியதைப்போலன்றி இவ்விருவர்க்கும் சுபமான உணர்ச்சி தோன்றியது,

இருவரும்— (அடிபணிந்து) பிரபுவும் தேவியாரும் சிறந்து வாழ்க.

அரசன்—உட்காருக.

(இருவரும் உட்கார்ந்தனர்.)

அரசன்—உங்களிருவர்க்கும் பயிற்சி எந்தக் கலையில்?

இருவரும்—பிரபுவே, ஸங்கீத கலையில்.

அரசன்—தேவி, இவ்விருவருள் ஒருவளை நீ கைக்கொள்க.

அரசி—மாளவிகே, இங்கே பார். ஸங்கீதப் பயிற்சியில் துணையாகக்கொள்ள இவருள் யாவள் உனக்கு வேண்டும்?

இருவரும்—(மாளவிகையைப் பார்த்து) ஆ! ஆ!! நமது ராஜகுமாரி (நமஸ்கரித்து) ராஜகுமாரி ஓங்கி வாழ்க.

(மாளவிகையும் இருவரும் கண்ணீர் உதிர்க்கின்றனர்.
எல்லாரும் வியப்புடன் நோக்கின்றனர்.)

அரசன்—நீங்கள் யாவர்? இவள் யாவள்?

முதலாமவள்—பிரபுவே, இவள் எங்கள் ராஜகுமாரி.

அரசன்—எப்படி?

இருவரும்—பிரபு கேட்கவேண்டும். பிரபுவினுடைய வென்றிப் படைகள் விதர்ப்ப நாட்டானைப் பிடித்துக் கொண்டபின், ராஜகுமாரராகிய மாதவஸேனரைச் சிறையிலிருந்து தாங்கள் விடுவித்தீர்களல்லவா? அந்த மாதவஸேனரது தங்கை இவர். மாளவிகை என்பது இவரது பெயர்.

அரசி—ஆ. ராஜகுமாரியா இவள்? நான் சந்தனக் கட்டையையன்றோ பாதுகையாக்கி இகழ்வாக மிதித்துவிட்டேன்.

---

மேல்வரும் காரியத்தைக் குறிப்பிடுவதாயிருக்கின்றது. இதனையே ரஜனிகையும் உணர்த்துகிருள். "அபிமுகீஷ்விவ காங்க்ஷிதஸித்திஷு-வ்ரஜதி நிர்வ்ருதிமேகபதே மன:" என்ற விக்ரமோர்வசியச் செய்யுளும் இங்கு நினைக்கற்பாலது.

தேவி.—ஒருவளைத்தான் கைக்கொள்ள நினைக்கின்ருன் அரசன்.

ஆ.—இங்கு அரசியின் உண்மையான ஸ்வபாவம் வெளிப்படுவதைக் காண்க.

அரசன்—அங்ஙனம் பெருமை வாய்ந்தவள், இங்ஙனமாகக் காரணம் என்ன?

மாளவிகை—(நெட்டுயிர்த்து, மனத்துள்) தெய்வத்தின் கட்டளை தான்.

இரண்டாமவள்—கேளுங்கள்—எங்கள் ராஜகுமாரராகிய மாதவஸேனர் தாயாதி கையில் சிக்குண்டபொழுது, அவருடைய மந்திரியாகிய ஆரிய ஸுமதி என்பவர், எங்களைப் போன்ற பரிஜனங்களை விட்டுவிட்டு, இந்த ராஜகுமாரியை மாத்திரம் ரகஸியமாக அப்புறப் படுத்தி அழைத்துச் சென்றார்.

அரசன்-இதுவரை நாம் முன்னரே கேட்டறிந்திருக்கின்றோம்.

இருவரும்—இவ்வளவுதான் எங்களுக்குத் தெரியும். இதற்கு மேல் தெரியாது.

பிக்ஷுணி—இதற்கப்புறம் நடந்தவற்றைப் பாக்கியம் குறைந்த நான் பகர்கின்றேன்.

இருவரும்—ராஜகுமாரி, ஆரிய கௌசிகியின் குரல்போலிருக்கின்றதே.

மாளவிகை—ஆம்.

இருவரும்—ஆரிய கௌசிகி துறவிக் கோலம் கொண்டிருப்பதால் எளிதில் அறிய முடியவில்லை. பகவதி, தொழுகின்றோம்.

பிக்ஷுணி—இருவர்க்கும் க்ஷேமம் உண்டாவதாக.

---

தெய்வத்தின்— இது மனம் நொந்து பேசிய பேச்சாயினும் உண்மையும் இவ்வாறேயன்றோ.

ஆம்— கௌசிகி மாளவிகையையும், மாளவிகை கௌசிகியையும் அறிந்திருக்கின்றனர். ஆயினும் இவ்விருவரும் ஒருவரையொருவர் அறிந்திருப்பதாக வெளிப்படுத்திக்கொள்ளவில்லை. அரங்கமேடையில் மட்டும் ஒருவரையொருவர் காணும்படி நமது மஹாகவி அநுமதி கொடுத்திருக்கிறார். மாளவிகை, தனது அருமைத்தோழியான வகுளாவலிகையிடத்திலும் இதனைத் தெரியப்படுத்தவில்லை. கௌசிகி, துறவி நிலையிலும் பூர்வவாஸனையை முன்னிட்டுப் பரோபகாரமாக மாளவிகை விஷயத்தில் சிறிது உதவி புரிகின்றாள். பவபூதி மஹாகவியின் மாலதீமாதவத்தில் தனது துறவிநிலைக்கு முற்றிலும் மாறாகப் பேசி

அரசன்—பகவதி, இவர்களெல்லாரும் தங்களைச் சேர்ந்தவர் தாமோ?

பிக்குணி—ஆம். அவ்வாறே.

விதூஷகன்—அவ்வாறாயின், மாளவிகையைப் பற்றிய மற்றைச் செய்திகளைப் பகவதியே பகரவேண்டும்.

பிக்குணி—(மனச்சோர்வுடன்) கேளுங்கள்— மாதவஸேனருடைய மந்திரியாகிய ஸுமதி என்பவர் எனது தமையனாராவர்.

அரசன்—ஊஹித்துக்கொண்டேன். மேலே?

பிக்குணி—தனது ஸஹோதரனைப் பகைவன் பிடித்துவிடவே தவித்து நின்ற இந்த மாளவிகையையும், என்னையும் என் தமையனார், தனிமையுற அப்புறப்படுத்தித் தம்முடன் அழைத்துக் கொண்டு சென்று விதிசை நகரை நோக்கிச் செல்லும் வணிகர் கூட்டத்தில் கலந்துகொண்டனர்.

அரசன்—பிறகு, பிறகு.

பிக்குணி—இவ்வணிகர்கள் வழிநடந்த களைப்புத் தீர ஒரு காட்டின் நடுவில் தங்கினர்.

அரசன்—அப்புறம் என்ன நிகழ்ந்தது?

பிக்குணி—அப்பொழுது,

அம்பறாத் தூணிகளிலுள்ள பட்டைக் கயிற்றை மார்பில் இறுக முடிந்தும், குதி கால் வரையில் தொங்கும்படி மயில் தோகைகளைத் தரித்தும் இருந்த வழிப் பறிக் கள்வர் படை, கையும் வில்லுமாய்ப் பேரிரைச்சலிட்டுக் கொண்டு பிறர் எதிர்த்து நிற்க முடியாவண்ணம் திடீரெனத் தோன்றிற்று.

---

யும் காரியங்களை நடத்தியும் வரும் காமந்தகி என்பாளோடு நமது கௌசிகியை ஒப்பிட்டுப் பார்ப்பின், நம் கவிராயரது பேரறிவு புலப்படும்.

அம்பறாத்தூணி— "தூணீரபட்ட பரிணத்த புஜாந்தராளம்" என்பது மூலம். முதுகின்மீது கிடக்கும் அம்பறாத் தூணி விழாதபடி

(மாளவிகை, அச்சம் காட்டுகின்றாள்.)

**விதூஷகன்**—அம்மா, பயப்படவேண்டாம். சென்ற செய்தியை யன்றோ பகவதி சொல்கின்றார்.

**அரசன்**—பிறகு, பிறகு.

**பிக்ஷுணி**—பின்னர் வணிகவீரர்களுக்கும் திருடர்களுக்கும் சிறிதுநேரம் சண்டை நடந்தது. அதில் திருடர்கள் வணிகர்களைப் பின் வாங்கச் செய்தார்கள்.

**அரசன்**—பகவதி, இதற்கப்புறம் இனிக் கேட்பது வெகு கஷ்டம்.

**பிக்ஷுணி**—பின்னர், என் ஸஹோதரர்,

தம் தலைவரிடம் பிரீதி பூண்டொழுகுபவராதலின், அந்த ஆபத்தில் பகைவரால் நேர்ந்த அவமானத்தைக் கண்டு நடுங்கின இம்மாளவிகையைக் காப்பாற்றத் தம் ஆருயிரை இழந்து தமது பிரபுவிடம் தமக்குள்ள கடன்மையைச் செலுத்தினர்.

---

அதில் கோத்திருக்கும் அகலமுள்ள கயிற்றால் மார்பில் நன்கு கட்டியிருக்கிறார்களென்பது கருத்து. "தூணீரபட்டங்களால் (பரிணத்த) விசாலங்களான" என்பது ஒருவருரை. மயில்களின் தோகையை உடம்பில் அணிவது அந்த ஜாதியாரின் வழக்கம். "ஆகர்ணலம்பி" என்ற பாடமானால் "காதுவரை தொங்குகின்ற" என்பது பொருள். மல்லிநாதர் குமாரஸம்பவ வியாக்கியானத்தில் "விரைவில் ஓடுவதற்காக அரையில் மயில் தோகையைக் கட்டிக்கொள்வது வேடர்களின் வழக்கம்" என்று எழுதியிருக்கிறார். "ஆபாத துஷ்ப்ரஸஹம்" என்பது வடசொல். ஆபாதமாவது திடீரெனத் தோன்றுதல். எதிர்பாராத ஸமயத்தில் திடீரெனத் தோன்றியபடியால், அவர்களை எதிர்த்து நிற்க முடியாது என்பது கருத்தாம். "ஆபாதேநாபி துஷ்ப்ரஸஹம்—சிறிதுபோது கூட அவர்களோடு நின்று யுத்தம் செய்ய முடியாதென்பது கருத்து" என்றும் கூறுவர்.

இதற்கு— "அத: பரம் இதானீம் கஷ்டம் ச்ரோதவ்யம்" என்பது மூலம். "இனிக் கேட்டு ஸஹிக்கமுடியாது." என்றும், "இனிக் கேட்கப்படவேண்டியது உங்களுடைய கஷ்டச் செய்திதான்" என்றும் இருவிதமாகக் கருத்துக் கூறுவர்.

**முதலாமவள்**—ஐயோ, ஸுமதி கொல்லப்பட்டாரா?

**இரண்டாமவள்**—ஆம். அதனாலல்லவா நமது ராஜகுமாரிக்கு இந்த நிலைமை நேர்ந்தது.

(பிக்ஷுணி கண்ணீர் உதிர்க்கின்றாள்.)

**அரசன்**—பகவதி, பிறப்புள்ளாரின் உலக நடை இங்ஙனமேயுளது. தம் தலைவரிடமிருந்து பெற்ற ஊதியத்தைப் பயன் படச் செய்த மஹானைப் பற்றித் துக்கிப்பது தகாது.

**பிக்ஷுணி**—அப்பொழுது நான் மூர்ச்சையடைந்துவிட்டேன். பிறகு மூர்ச்சை தெளிந்து பார்க்கும்பொழுது இந்த மாளவிகை காணப்படவில்லை.

**அரசன்**—பகவதி, தாங்கள் பெரிய துன்பங்களையன்றோ அனுபவித்திருக்கின்றீர்கள்.

**பிக்ஷுணி**—பின்பு நான் என் ஸஹோதரரது சரீரத்தைக் கொளுத்திவிட்டுக், கைம்பெண்ணனதில் எனக்கேற்பட்டிருந்த துக்கம் அப்பொழுது புதிதாகி வலிமை பெற்று என்னை வருத்தத், தங்களது தேசத்திற்கு வந்து இந்த இரு காஷாய வஸ்திரங்களை எடுத்துக் கொண்டேன்.

**அரசன்**—உசிதம். நல்லாரின் வழி இது தான்.

**பிக்ஷுணி**—பிறகு தடையில்லாதவாறு அந்தப்புரத்தினுட் செல்ல எனக்குத் தேவியாரோடு பரிசயம் ஏற்பட அவ்வந்தப்புரத்தில் இந்த மாளவிகை காட்டாளரிடமிரு

---

பின்பு— "புநர்நவீக்ருத வைதவ்ய துக்கயா" என்பது மூலம். தமையனுரையுமிழந்தபோது தன்னை ஆதரிப்பாரில்லாமை பற்றிக் கணவனை இழந்த துக்கம் அப்பொழுது மனத்தில் மூண்டு கொண்டது என்கிறாள் பிக்ஷுணி. "நவ வைதவ்ய மஸஹ்ய வேதநம்" என்ற குமார ஸம்பவச் செய்யுளும் இங்கு நினைக்கற்பாலது. "இமே காஷாயே க்ருஹீதே" என்பதுமூலம். பிக்ஷுணி தனக்குத் துறவறம் கைக்கொள்ள நிர்ப்பந்தம் நேர்ந்தது என்றோ, அல்லது துறவறம் அகத்துப் பயன்படவில்லை என்று எண்ணியோ வருத்தமுற்றுப்பேசுபவளாகக் காணப்படுகின்றாள்.

உசிதம்— பிக்ஷுணியின் வருத்தத்தைக் குறிப்பாலுணர்ந்த அரசன் அவளைத் தேற்றுகிறதாகத் தோன்றுகிறது.

ந்து வீரஸேனனிடமும், அவனிடமிருந்து தேவியிடமும் வந்து சேர்ந்திருப்பதைக் கண்டறிந்தேன். இவ்வளவே நான் தெரிவிக்கவேண்டிய செய்தி.

**மாளவிகை**—(மனத்துள்) இப்பொழுது பிரபு என்ன சொல்லப் போகின்ருரோ.

**அரசன்**—அந்தோ, ஆபத்துக்கள், தாம் வரும்பொழுது அவமானங்களையும் கூட அழைத்து வருகின்றன. ஏன் ?

"தேவி" என்றழைக்கப்படவேண்டிய இம் மாளவிகை, வேலைக்காரியாகவன்ருே நடத்தப்பட்டாள். வெண் பட்டாடையை ஸ்நாநத்திற்குரிய வஸ்திரமாக எங்காவது உபயோகிக்கலாமா?

**அரசி**—பகவதி, தாங்கள், மாளவிகை நற்குடிப்பிறப்பினளென்பதைத் தெரிவிக்காதிருந்தது தகுதியன்று.

**பிக்குணி**—அவ்வாறன்று. ஒரு காரணம் பற்றியே நான் அதனை வெளிப்படுத்தாதிருந்தேன்.

**அரசி**—அந்தக் காரணம் தான் என்ன ?

**அரசன்**—சொல்லத் தகுமானல் சொல்லலாமே.

**பிக்குணி**—கேட்கவேண்டும்— இந்த மாளவிகையின் தந்தையார் ஜீவித்திருக்கும்பொழுது, பொய்யாமொழிப் பெரியாரொருவர், தேசாந்தரயாத்திரை செய்துகொண்டுவரு

---

அந்தோ— "பரிபவோபஹாரிணோ விநிபாதா:" என்பது மூலம். விநிபாதமாவது தன்னிலையிலிருந்து வீழ்தலாம்.

சொல்ல— மாளவிகை விஷயமாகத் தான் நடத்திய காரியமேதாவது இவ்வழியில் வெளிப்பட்டுப் போகுமோ என்று அஞ்சினற்போல அரசன் "தகுமானல் சொல்லலாம்" என்கிருன்.

கேட்கவேண்டும்— "கோபி தேசயாத்ராகதோ வித்தாதேசோ" என்பது மூலம். வித்தமான-பலிக்கின்ற, ஆதேசத்தைக் கட்டளையை யுடையவன் என்பது பதப் பொருள். "தேவயாத்ராகதோ" என்ற பாடத்தில் தேவயாத்ரையாவது உத்ஸவகாலத்தில் பகவானுடைய வீதிப் புறப்பாடு.

மிடையில் அங்கு வந்து சேர்ந்தார். "இவள் ஒரு வருஷ காலம் அடிமையாயிருந்துவிட்டுப் பிறகு தக்க கணவனை அடைவாள்" என்று மாளவிகையைக் குறித்து அவள் தகப்பனுரிடம் மொழிந்தார். அப்பொழுது நானும் அங்கிருந்தமையால் இதனை அறிந்தேன். இங்கு மாளவிகை தங்களுக்கு வேலைக்காரியாயிருப்பதைக் கண்டதும் "அந்த அறிஞரின் கட்டளைப்படி காரியம் ஆயிற்று" என்று எண்ணி, நற்காலத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். ஆனதுபற்றி நான் செய்தது உசிதம் என்றே கருதுகின்றேன்.

அரசன்—உண்மை. உபேக்ஷயாயிருந்தது தகும்.

(பிரவேசித்து)

கஞ்சுகி-பிரபுவே, வேறு பிரஸ்தாவத்தினிடையில் இதனைத் தெரிவிக்க மறந்துவிட்டேன். "நாங்கள் விதர்ப்பதேச விஷயத்தில் இன்னபடி செய்வதென்று ஒரு முடிவுக்கு வந்திருக்கின்றோம்; அந்த விஷயத்தில் பிரபுவின் கருத்தை அறிய விரும்புகின்றேன்." என்று அமைச்சர் தெரிவிக்கின்றார்.

---

பிரவேசித்து— முன்னர் பிரவேசித்த கஞ்சுகி அங்குத் தானே நிற்கின்றமையால் "பிரவேசித்து" என்று கூற இடமில்லை. ஆதலின் இங்குப் பிரவேசமாவது சிறிது அகன்று நின்ற கஞ்சுகி அரசனருகு வருவதேயாமெனக் கொள்க.

பிரபுவே— "கதாந்தரேண அந்தரிதம் இதம் அமாத்யோ விஜ்ஞாபயதி" என்பது மூலம். கதாந்தரமவாது வேறு பிரஸ்தாவம்— வேறு விஷயமான பேச்சு. இங்கு வேறு பிரஸ்தாவமாவது மாளவிகையைப் பற்றிய விஷயம் தான். மாளவிகை விஷயமாக இங்கு நடந்த செய்தியில் மனம் செலுத்தியிருந்தமையால், மந்திரி அரசனிடம் தெரிவிக்கச் சொல்லியிருந்ததைத் தெரிவிக்கத் தான் மறந்துவிட்டதாகக் கஞ்சுகி கூறுகின்றான். நாட்டியப் பெண்களிருவரையும் அழைத்துவரச் சென்றபோது இவ்விஷயத்தை மந்திரி கஞ்சுகியிடம் சொல்லியிருக்கவேண்டும். "வேறு பிரஸ்தாவத்தினிடையில் இதனைத் தெரிவிக்க மறந்து போனேன்" என்பதையும் மந்திரியின் வாக்கியமாகக் கொள்ளலுமாம். அப்பொழுது கதாந்தரமாவது ராஜ்யஸம்பந்தமுள்ள வேறு காரியமெனக் கொள்க.

**அரசன்**—மௌத்கல்ய, மதிப்புக்குரிய மாதவஸேனன் யஜ்ஞஸேனன் என்ற இரு ஸஹோதரர்களுக்கும் தனித்தனியாக இரு ராஜ்யங்களை ஏற்படுத்த எண்ணுகின்றேன்.

சந்திரனும் ஸூரியனும் இரவையும் பகலையும் தனித்தனியாகப் பிரித்து ஆள்வதைப் போல, இவ்விரு ஸஹோதரரும், வரதையாற்றின் வடகரையையும் தென்கரையையும் தனித்தனியாகப் பிரித்து ஆளக் கடவர்.

**கஞ்சுகி**—பிரபுவே, மந்திரிஸபையிடம் இவ்வாறு தெரிவிக்கின்றேன்.

(அரசன் தன் அனுமதிக்கறிகுறியாக விரலை அசைக்கின்றன்.
கஞ்சுகி செல்கின்றன்.)

**முதலாமவள்**—(ரஹஸியமாக) ராஜகுமாரி, நல்ல வேளையாய் நமது ராஜகுமாரர் பாதி ராஜ்யத்தில் நிலைபெறுவார்.

**மாளவிகை**—இஃது இருக்கட்டும். அவர் உயிருடன் வெளி வந்ததனையே நாம் மிகவும் பாராட்டவேண்டும்.

(பிரவேசித்து)

**கஞ்சுகி**—பிரபு சிறப்புறுக. "என்னே பிரபுவின் நேர்மையுள்ள புத்திப் போக்கு! மந்திரி ஸபையின் நோக்கமும் இப்படித் தான். ஏனெனில்,

இரதத்தில் பூட்டிய இரு குதிரைகளும் பாரத்தை இரு கூறாகப் பிரித்தேற்றுக்கொண்டு ஒன்றோடொன்று தாக்காமல் எவ்வாறு தேர்ப்பாகன் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து நிற்கின்றனவோ, அவ்வாறே அவ்விரு அரசரும் ஸம்பத்தை இரு

---

மௌத்கல்ய—"மாதவஸேன யஜ்ஞஸேனயோ:" என்பது சிறந்த பாடம். அரசன் தன் மனத்தை மகிழ்விக்கும் மாதவஸேனனைச் சந்திரனோடு ஒப்பிட்டுக் கூறுவதன்றோ பெரிதும் பொருத்தமுடையது.

சந்திரனும்.—வடகரை என்பதற்கு வடகரை முதல் வடக்குள்ள தேசமென்பது பொருள். தென்கரை என்பதையும் இவ்வாறே கொள்க.

பிரபு.—"அஹோ கல்யாணீ தேவஸ்ய புத்தி:" என்பது மூலம். "கல்யாணீ" என்பதற்கு மங்களமுள்ளது என்பது பொருள்.

கூறுகப் பிரித்துக் கைக்கொண்டு ஒருவரை ஒருவர் தாக்க முயலாமல், தங்களை நடத்தும் தேவரீருடைய ஆஜ்ஞைக்குக் கீழ்ப்படிந்து நிற்பார்கள்"

என்று மந்திரி தெரிவிக்கின்றார்.

அரசன்—"இப்படிச் செய்யுமாறு சேனைத் தலைவன் வீரஸேனனுக்கு எழுதவேண்டும்" என்று நான் சொன்னதாக மந்திரிஸபையிடம் சொல்.

கஞ்சுகி—பிரபுவின் கட்டளைப்படியே. (சென்று, பரிசுடன் ஒரு பத்திரிகையைக் கையிலெடுத்துக் கொண்டு பிரவேசித்து) பிரபுவின் கட்டளையை நிறைவேற்றிவிட்டேன். ஸேனாபதியாகிய புஷ்பமித்திரப் பிரபுவிடமிருந்து பரிசுடன் இதோ இந்தப் பத்திரிகை இப்போது வந்திருக்கின்றது. பிரபு நேரில் பார்க்கவேண்டும்.

(அரசன் பரபரப்புடன் எழுந்து அந்தப் பரிசை வெகுமானத்துடன் வாங்கிச் சிரமேற்கொண்டு, பிறகு அதனைப் பரிஜனத்தினிடம் கொடுக்கின்றான்; அந்தப் பத்திரிகையை அவிழ்க்கின்றான்.)

அரசி—அந்தோ, என் மனம் முழுதும் அதனையே அன்றோ நாடிச் செல்கின்றது. பெரியாரின் க்ஷேமச் செய்தியைக் கேட்டபின், புதல்வன் வஸுமித்திரனுடைய செய்தியை வினவுவேன். அரும்பெருங் காரியத்திலன்றோ ஸேனாபதி அவனை ஏவியிருக்கின்றார்.

அரசன்—(உட்கார்ந்து வாசிக்கின்றான்.) "க்ஷேமம். யாகசாலையிலிருந்து ஸேனாபதி புஷ்பமித்திரன், விதிசை நகரில் வாழும்

---

பிரபுவின்.— புஷ்பமித்திரன் அக்கினி மித்திரனுடைய தந்தை. "மௌரிய வம்சத்தினனான 'ப்ருஹத்ரதன்' என்னும் அரசனை அவனது ஸேனாபதியாகிய புஷ்பமித்திரன் கொன்றுவிட்டு ராஜ்யமாளப் போகிறான். அவன் மகன் அக்கினிமித்திரன்" என்று விஷ்ணுபுராணம் கூறுகின்றது. புஷ்பமித்திரன் தனது அரசனைக் கொன்று கைப்பற்றிய ராஜ்யத்தில் தனது பிள்ளையை அரசனாக்கித் தான் முன்போலவே அவ்விராஜ்யத்தின் ஸேனாபதிஸ்தானத்திலிருந்தானெனச் சரித்திரவல்லுநர் கூறுவர். அரசன் பதத்தைவிட ஸேனாபதி நிலைமை அந்நாளிலும் தாழ்ந்ததாகக் கருதப்படவில்லை என்பதை முகவுரையில் பரக்கப்பேசுவோம்.

க்ஷேமம்.— "ஸ்வஸ்தி யஜ்ஞசாணத்"என்று இப் பத்திரிகையின் ஆரம்பம். "ஸ்வஸ்தி" என்ற பதத்தை முன்னிட்டுப் பத்திரிகை

சிரஞ்சீவி குமாரன் அக்கினிமித்திரனை அன்புடன் அணைத்து அறிவிக்கின்றதாவது— நான் அசுவமேதயாகம் செய்யத் தீக்ஷை பூண்டு, மற்றைத் தேசங்களையெல்லாம் சுற்றிவரக் குதிரையை விடுத்தேன். அந்தக் குதிரை ஒரு வருஷத்திற்குள் திரும்பி வரவேண்டும். அதனைப் பின்தொடர்ந்து சென்று காக்க, நூறு ராஜகுமாரர்களுடன் நமது வஸுமித்திரனை அனுப்பியிருந்தேன். ஸிந்துநதியின் தென்கரையிற் சென்றபோது யவனர்களுடைய குதிரைப்படை நமது வேள்விக் குதிரையை மறித்து எதிர்த்தது. பிறகு இரு படைகளுக்கும் கடும்போர் நிகழ்ந்தது."

(அரசி வியஸனக் குறியை வெளிப்படுத்துகின்றாள்.)

அரசன்—ஆஹா, இங்ஙனமா நடந்தது?

(மேற்பாகத்தையும் படிக்கின்றான்.)

"பிறகு வஸுமித்திரன் வில்லெடுத்துப் பகைவர்களை வென்று, அவர்கள் வலித்துக் கொண்டுபோக முயன்ற நம் குதிரையை மீட்டுவிட்டான்."

அரசி—அம் மா. இதனைக் கேட்டபிறகு தான் என் மனம் ஆறுதலடைகின்றது.

அரசன்—(பத்திரிகையின் மிகுதியைப் படிக்கின்றான்.) "ஆதலின், ஸகரன் தனது பௌத்திரனாகிய அம்சுமான் குதிரை

---

எழுதுவது ஸம்பிரதாயம். "ஸ்வஸ்திமுகம்" என்று லேகத்திற்குப் பெயர் என்று ஹேமசந்திர நிகண்டு கூறும். "ஸ்ரீமுகம்" என்று கூறுவதும் இவ்வாறே. "அச்வமேதப்ரகாணத்தில், "சதேந ராஜ்புத்ரை: ஸஹ" என்று சுருதி கூறுகின்றது" என்று காடயவேமன் எழுதுகின்றான். "ப்ரார்த்தித:" என்ற வட சொல்லுக்கு எதிர்க்கப்பட்டது என்ற பொருளுமுண்டு. "த்வனத: ப்ரார்த்தயதே ம்ருகாதிப:" என்று பாரவி கவியும் இவ்வர்த்தத்தில் அப்பதத்தைப் பிரயோகித்திருக்கின்றான்.

ஆதலின்.— பௌத்திரன் = புத்திரனுடைய புத்திரன். பேரப்பிள்ளை என்பது வழக்கச் சொல். "விகதரோஷசேதஸா" என்பது வட சொல். "எதிர்த்த யவனர்களை நம் வஸுமித்ரன் வென்றுவிட்டான். ஆதலின் கோபங்கொள்ள இடமில்லை. சாந்தமாயும் தெளிந்துமுள்ள மனத்தோடு ஸந்தோஷத்துடன் வந்து அனுபவிக்கவேண்டிய புனித

யை மீட்டுவர அசுவமேதயாகம் செய்ததைப் போல, நானும் என் பௌத்திரன் குதிரையை மீட்டுவந்திருப்பதால் அசுவமேதயாகம் செய்யப்போகின்றேன். ஆகையால் நீ, காலம் தாழ்த்தாமலும் மனத்திற் கோபங்கொள்ளாமலும் அந்தப்புரத்தினருடன் யாகசாலைக்கு வரவேண்டும்."

இஃது எனக்குப் பெரியதோர் அனுக்கிரஹமே.

பிக்குணி— ஸந்தோஷம். புதல்வனது வெற்றியால் தாயும் தந்தையுமாகிய உங்களுக்குச் சீரும் சிறப்பும் பெருகுகின்றன. (அரசியைப் பார்த்து)

தாங்கள், கணவரால் வீரர்களுடைய மனைவியரின் முன்னணியில் நிறுத்தப்பட்டீர்கள். இப்பொழுது புதல்வர் மூலம் "வீர மாதா" என்னும் பதமும் தங்களுக்குக் கிடைத்துவிட்டது.

விதூஷகன்—தேவி, புதல்வன் தன் பிதாவைப் போலானனெனக் கண்டு மகிழ்கின்றேன்.

அரசன்—மௌத்கல்ய, யானைக் கன்று, பெரிய யானையைப் பின்பற்றிவிட்டது.

---

மான யாகமஹோத்ஸவ காலத்தில், யவனர் செய்த அபகாரத்தை நினைத்து வருந்திக் கோபங்கொள்ள வேண்டாம்" என்கிறான் புஷ்பமித்திரன். "இதிலிருந்து அக்கினிமித்திரனுக்கும் அவன் தகப்பனுக்கும் முன்பே விரோதமிருக்கிறதாகத் தெரியவருகிறது. ஆகையால் தான் புஷ்பமித்திரன் தனித்து வாழ்கின்றான். இருவர்க்குமுள்ள விரோதத்திற்கு ராஜ்யமோ அன்றிப் பெண்ணாசையோ காரணமாயிருக்கவேண்டும். அம்சுமானுடைய தகப்பனாகிய அஸமஞ்சனைப் போல அக்கினிமித்திரனும் அயோக்கியனென்பதும் உவமையால் தொனிக்கின்றது" என்று ஒருவர் எழுதுகின்றார்!

தாங்கள்.— ஒரு க்ஷத்திரிய ஸ்திரீ விரும்பவேண்டியவை "வீரபத்நீ—வீரனுடைய மனைவி" "வீரமாதா—வீரனுடைய தாய்" என்ற இரு விருதுகளே. அவை இரண்டும் அரசிக்குக் கிடைத்துவிட்டன என்கிறாள் பிக்குணி.

**கஞ்சுகி—**

ராஜகுமாரரின் இத்தகைய வீரச் செயல் என் மனத்தில் வியப்பைத் தரவில்லை. ஔருவ மஹருஷியிடமிருந்து நீரை யெரிக்கும் நெருப்புப் பிறந்தாற்போலப் பிறரால் தாக்கமுடியாத தங்களிடமிருந்தன்றோ இவர் பிறருந்திக்கின்றார்.

**அரசன்**—மௌத்கல்ய, யஜ்ஞஸேனனுடைய மைத்துனனை முன்னிட்டுச் சிறையிலிருப்போரெல்லாரையும் விடுவிக்கச் சொல்.

**கஞ்சுகி**—பிரபுவின் கட்டளைப்படியே.

[சென்றான்.

**அரசி**—ஜ்யஸேனே, புதல்வனது வெற்றிச் செய்தியை இராவதி முதலிய அந்தப்புரத்தினரிடம் அறிவித்திடுக.

**வாயிற்கா**—அப்படியே.

[செல்கின்றாள்.

**அரசி**—இங்கே வா.

**வாயிற்கா**—(திரும்பி) இதோ வந்திருக்கின்றேன்.

**அரசி**— (ரஹஸ்யமாக) மாளவிகையை அசோகமரத்திற்கு வளங்கொடுக்கும்படி அனுப்பியபோது அவளுக்கு நான் கொடுத்திருந்த உறுதிமொழியையும், அவளுடைய குலப் பெருமையையும் தெரிவித்து "என்னை ஸத்தியத்திலிருந்து நழுவுமாறு செய்யவேண்டாம்" என்று நான் வேண்டிக்கொண்டதாக இராவதியிடம் நயமாகச் சொல்.

---

இராஜகுமாரரின்.—நீரையெரிக்கும் நெருப்பாவது—மற்றைநெருப்புப்போல நீரினால் அவியாமல், அதனையும் எரித்துண்ணும்வடவாமுகாக்கினியாம். "ந காரணாத் ஸ்வாத் பிபிதே குமார: ப்ரவர்திதோ தீப இவ ப்ரதீபாத்" என்ற ரகுவம்சச் செய்யுள் இச் சந்தர்ப்பத்தில் நினைக்கற்பாலது.

மாளவிகையை.—என்னே அரசியின் உயர்ந்த ஸ்வபாவம்! அசோகமரம் பூத்தமையால் தனது வாக்குறுதியை நிறைவேற்றத் தொடங்கிய அரசிக்கு, இப்பொழுது மாளவிகையின் குலப் பெருமையும் இராவதியை ஸமாதானப் படுத்த ஒரு காரணமாகின்றது.

வாயிற்கா—தேவியாரின் கட்டளைப்படியே. (சென்று, மறுபடியும் வந்து) தேவி, புத்திரரின் வெற்றியை ஸந்தோஷத்துடன் ஒன்றுபட்டுக் கொண்டாடிய அந்தப்புரத்தினருடைய ரத்தினமிழைத்த ஆபரணங்களுக்கு நான் மஞ்சட்பெட்டியாய்விட்டேன்.

அரசி— இதில் என்ன ஆச்சரியம். இந்த க்ஷேமம் எனக்கும் அவர்களுக்கும் பொதுவானதன்றோ.

வாயிற்கா—(ரஹஸ்யமாக) தேவி, "எல்லாவுரிமைகளுமுள்ள தேவியாருக்கு இதுதான் ஏற்றது. முதலிற்கொடுத்த உறுதியை மாற்றுவது அழகாயிராது" என்று இராவதி தெரிவிக்கின்றார்.

அரசி—பகவதி, தங்கள் அனுமதியைப் பெற்று, ஆரிய ஸுமதி முன்னர் நிச்சயித்திருந்தவண்ணம் மாளவிகையை ஐயருக்குக் கொடுக்க விரும்புகின்றேன்.

பிக்குணி— தேவி, இப்பொழுதும் இவள் விஷயத்தில் தாங்கள் தாம் உரிமையுள்ளவர்.

---

**தேவியாரின்.**—தனது சரீரமெங்கும் அந்தப்புரத்தினர் கொடுத்த ஆபரணங்கள் நிறைந்திருப்பதால், ஆபரணங்கள் வைக்கும் பேழையாகத் தானாய்விட்டதாய்க் கூறுகின்றாள் வாயிற்காப்பவள்.

**எல்லா.**— "ஸத்ருசம் கலு தேவ்யா: ப்ரபவந்த்யா:" என்பது மூலம். "ப்ரபவந்த்யா:" என்பதற்கு ஸ்வாதந்திரியமுள்ளவள் என்பது பொருள். "தேவியாருக்கு ஸர்வ ஸ்வாதந்திரியமும் இருப்பதால் எது வேண்டுமானாலும் செய்யலாம். அதனைத் தடுக்க நான் யாவள்" என்பது கருத்து. இது இராவதி பொறாமையுடனும் வருத்தத்துடனும் இடித்துப் பேசிய பேச்சென்பர். "பிரபுத்தன்மை பொருந்தியவர், தாம் கூறிய உறுதி மொழியைக் காப்பாற்றுவதுதான் உசிதம். ஆதலின் அவ்வாறே செய்யலாம் என்று இராவதி ஸந்முகமாகவே சொல்லியனுப்பியிருக்கின்றாள்" எனக் கருத்துக் கொள்வது சாலவும் சிறந்தது.

**பகவதீ.**—மாளவிகையின் பந்து வர்க்கத்திற்பட்டவள் பிக்குணி. விவாஹமோ முன்னரே முடிவு செய்யப்பட்டிருக்கிறது. ஆதலின் பிக்குணியின் அனுமதியைப் பெற்று விவாஹத்தை நிறைவேற்றக் கருதுகின்றாள் அரசி.

**தேவி.**—என்னே! பிக்குணியின் ஸமயோசிதமான வார்த்தை.

**அரசி**—(மாளவிகையைக் கையிற் பிடித்துக்கொண்டு) ஐயனே, பிரியமான செய்தியைத் தாங்கள் தெரிவித்ததற்காக நான் கொடுக்கும் இந்தப் பரிசைப் பெற்றுக்கொள்ளுங்கள்.

(அரசன் வெட்கத்துடன் வாளா நிற்கின்றன்.)

**அரசி**—(சிரித்துக்கொண்டு) ஐயனே, ஏன் என்னைப் புறக்கணிக்கின்றீர்கள் ?

**விதூஷகன்**— "புது மணப்பிள்ளைகளெவரும் வெட்கப்படுவார்கள்" என்பது உலக வழக்கன்றே.

(அரசன் விதூஷகனை நோக்குகின்றன்.)

**விதூஷகன்**— அல்லது, அரசி மாளவிகைக்குத் "தேவி" என்ற விருதளித்து அவளைக் கொடுக்கப் பெற்றுக் கொள்வது தான் அரசருக்குத் தகும்.

**அரசி**—இவள் ராஜகுமாரி. இவளுக்கு அந்தப் பதத்தை இவளது குலமே கொடுத்திருக்க, அதனை வேறொருவர் சொல்லிக் கொடுக்கவேண்டுமோ ?

---

ஐயனே.—"பத்திரிகையைப் படித்துப் புத்திரனுடைய க்ஷேமச் செய்தியை அறிவித்ததற்காக மாளவிகையைப் பரிசாகக் கொடுக்கின்றேன்" என்கிறாள் அரசி. இது ஸமயோசிதமான ஒரு விளையாட்டுப் பேச்சு. அசோகம் பூத்தவுடனேயே மாளவிகையை அரசனுக்குக் கொடுக்க அரசி ஒருப்பட்டு விட்டாளன்றே.

அல்லது.—"தேவி என்றழைக்கப்படவேண்டிய இம் மாளவிகை, வேலைக்காரியாகவன்றே நடத்தப்பட்டாள்" என்று அரசன் தனது கருத்தை முன்னமே ஸூசனை செய்திருந்தான். அரசி அவ்வாறு "தேவி" என்ற விருது அளிக்காமல் மாளவிகையைக் கொடுக்கவந்த போது அரசன் பெற்றுக்கொள்ளாமல் தயங்கி நின்றான். இக் கருத்தை முதலிலறியாத விதூஷகன், பரிஹாஸமாக ஒரு வார்த்தை சொன்னான். அப்பொழுது அரசன் விதூஷகனை நோக்கிக் குறிப்பால் தனது எண்ணத்தை உணர்த்தினான். மேதாவியான விதூஷகன் உடனே அரசன் கருத்தை உணர்ந்து இவ்வாறு பேசுகின்றான்.

இவள்.—தனக்குமட்டுமுள்ள அந்த விருதினைக் கொடுக்கச் சிறிது தயங்குகின்றாள் அரசி. "இவள் ராஜகுமாரி. இப்பொழுது அரசருக்கு மனைவியாகின்றாள். ஆதலின் "தேவி" என்ற விருது இவளுக்குத் தானாகவே கிடைக்குமன்றே. இதனை நான் கொடுக்கவேண்டுமோ" என்ற அரசியின் இந்தப் பேச்சு வெறும் வெளிப் பேச்சே.

*பிக்குணி*—*அவ்வாறன்று அவ்வாறன்று.*

ஏ மங்களம் பொருந்தியவளே, ஓர் இரத்தினம், இரத்னக் குழியில் விளைந்து சிறப்புற்றதாயினும், சாணையிலேற்றிச் செப்பனிடப் படாவிடின், அது தங்கத்தோடு சேருந் தகைமை பெறுது.

*அரசி*—பகவதி, புத்திரனுடைய க்ஷேமச் செய்தியினிடையில் இதனை மறந்துவிட்டேன். பொறுத்தருளுக. ஜயஸேனே, நீ போய் மாளவிகைக்குக் கோலஞ்செய்வதற்குரிய வெண்பட்டாடையைச் சீக்கிரம் எடுத்து வா.

---

ஏ மங்களம்.— மாளவிகையைத் தேவியாக்குவதில் பிக்குணிக்கு உள்ள ஊக்கமும் ஸந்தோஷமும் அளவு கடந்தனவன்றோ. ஆதலின், தக்க உவமை கூறி, அவ்வாறு செய்யும்படி அரசியைத் தூண்டுகின்றாள் பிக்குணி. "மாளவிகையை அரங்கமேடைக்கு வரவழைக்க நடந்த காரியங்களில் நான் கலந்து கொண்டபோது தங்களுக்குக் கோபம் பிறந்ததன்றோ. அவ்வாறில்லாமல் இப்பொழுது மனம் தெளிந்து இந்தச் சுபமான காரியத்தை நிறைவேற்றிவைக்கவேண்டும்" என்ற கருத்தை மனத்தில் வைத்துக்கொண்டு "கல்யாணி— ஏ மங்களம் பொருந்தியவளே," என்று அரசியை அழைக்கின்றாள் பிக்குணி. இங்கு "ரத்னம் ஸமாகச்சது காஞ்சநேந" என்ற ரகுவம்சச் செய்யுள் நினைக்கற்பாலது. மனைவி இல்லாமலே சிறப்புறக்கூடும் புருஷனைத் தனிமையிலும் விளங்கும் தங்கத்திற்கொப்பாகவும். தலைவனில்லாது தனித்துச் சிறப்புற முடியாத கன்னியாரத்தினத்தைத் தங்கம் கூடாமல் தனியே துலங்காத ரத்தினத்திற்கொப்பாகவும் கூறியிருக்கும் நம் கவிராயரது திறமையைக் கண்டு மகிழ்க.

பகவதி— வெண்பட்டாடையைப் போர்த்துக்கொள்வது, தேவியாயிருப்பவளுக்கு மட்டுமுள்ள ஒரு கௌரவ காரியமென்பர். இதனை, அரசனும் "வெண்பட்டாடையை ஸ்நாநத்திற்குரிய வஸ்திரமாக எங்காவது உபயோகிக்கலாமா" என்று உவமை மூலம் ஸூசிப்பித்திருக்கின்றான். "அப்யுதயகதயா ந லக்ஷிதம்" என்பது வட சொல். ஸந்தோஷகாலத்தில் உண்டாகும் மனக் கிளர்ச்சியால் இது என் நினைவுக்கு வரவில்லை என்கிறாள் அரசி. அரசி, முதலில் சிறிது தயங்கினாளென்றாலும், அரசனுடைய குறிப்பையும் விதூஷகனுடைய பேச்சையும் பிக்குணியின் வார்த்தையையும் கேட்ட பிறகு அவ்வாறே தேவி பதத்தைக் கொடுக்க முன் வந்துவிட்டாள். புத்தி கூர்மை மிகவுமுள்ள அரசி,

**வாயிற்கா**—தேவியாரின் கட்டளைப்படியே.(சென்று, வெண்பட்டாடையைக் கையிலெடுத்துக் கொண்டு வந்து) தேவி, இதோ கொண்டு வந்திருக்கின்றேன்.

**அரசி**— (மாளவிகையை அந்த வெண் பட்டாடையால் போர்த்து) ஐயர் இப்பொழுது பெற்றுக் கொள்ளலாமே.

**அரசன்**—தேவி, நீ கட்டளையிடுவதால் நமக்கு மறுமொழி கூற இடமில்லை.

**பிக்குணி**—ஆஹா! வெகு ஸந்தோஷம். மாளவிகை பெற்றுக் கொள்ளப்பட்டாள்.

**பரிஜனங்கள்**— என்னே தேவியாரின் நேர்மை!

(அரசி பரிஜனங்களை நோக்குகின்றாள்.)

**பரிஜனங்கள்**—(மாளவிகையினருகு சென்று)தேவி ஓங்கி வாழ்க.

(அரசி பிக்குணியை நோக்குகின்றாள்.)

**பிக்குணி**—தேவி, தங்கள் விஷயத்தில் இஃது ஆச்சரியப்படக்கூடியதன்று. ஏன்?

கணவரிடம் அன்பு பூண்டொழுகும் கற்பிற்கரசிமார்,
தம் கணவரோடு ஸபத்னிகளைச் சேர்த்துவிட்டாயினும்

---

தேவி என்ற விருதினைத் தானே கொடுக்க விரும்பியிருந்ததாகவும், அதற்காகக் கொண்டுவரவேண்டிய பட்டாடையை எடுத்து வரும்படி வேலைக்காரியை ஏவ மறந்துவிட்டதாகவும் கூறித் தனது நிலைமையை எவ்வளவு அழகாகக் காத்துக்கொள்கின்றாளென்பதை உய்த்துணர்க. "இதனை மறந்துவிட்டேன்" என்ற விடத்திலுள்ள "இதனை" என்பதற்கு "தேவி என்ற விருதளிப்பதை" என்பது பொருளன்று. "வெண் பட்டாடையைக் கொண்டுவருமாறு வேலைக்காரியை ஏவவேண்டியதை" என்பது பொருளாம்.

அரசி.—"தங்களிஷ்டப்படி செய்து விட்டேன்" என்பதை அரசி தனது பார்வையால் பிக்குணியை உணர்த்துகின்றாள்.

கணவரிடம்.—ஸபத்னிகள்=ஒரே கணவனையுடைய மாதரார். அன்னாரை=கணவரை. கணவரைத் திருப்திப்படுத்த நினைக்கும் பதிவ்ரதைகள் தம் இன்பதுன்பங்களைப் பாராட்டமாட்டார்கள் என்பது கருத்து.

அன்னுரை வழிபட்டு நிற்பர். ஸமுத்திரம் போய்ச் சேரும் நதிகள் நூற்றுக்கணக்கான வேறு நதிகளையும் தம்முடன் கூட்டிக்கோண்டன்றோ அங்குப் போய்ச் சேர்கின்றன.

(பிரவேசித்து)

நிபுணிகை—பிரபு சிறப்புற்று வாழ்க. "முன்பு நான், தாங்கள் செய்த உபசாரத்தைப் புறக்கணித்துத் தவறிழைத்ததுந் தவிர தங்களுக்கு அனுகூலமாக யாதொன்றும் செய்யவில்லை. இப்பொழுது தங்களுடைய மனோரதம் நிறைவேறி விட்டபடியால், தாங்கள் என்னிடம் அனுக்கிரகம் பாராட்டவேண்டும்" என்று இராவதி விண்ணப்பம் செய்கின்றாள்.

அரசி—நிபுணிகே, இராவதியின் பிரார்த்தனையை அவசியம் பாராட்ட ஐயருக்குத் தெரியும்.

நிபுணிகை—தேவியாரின் கட்டளைப்படி.

[சென்றாள்.

பிக்குணி—பிரபுவே, தாங்கள் என்னிடம் கருணை புரிவதாயின், தங்களுறவினால் மேன்மைபெற்ற மாதவஸேனனைக் கொண்டாட விரும்புகின்றேன்.

அரசி—பகவதி, தாங்கள் எங்களை விட்டகலலாகாது.

---

பிரபு.—இங்கு உபசாரமாவது காலில் வீழ்தலாம். இராவதிக்கும் நல்ல ஸமயத்தில் நற்புத்தி வந்தது பாராட்டத்தக்கதே. ஐயோ பாவம். இராவதி வேறு என்ன செய்வாள். மாளவிகையின் மணமோ நிறைவேறாமலிராது என்பதை அறிந்த பின்னர் இராவதிக்கு இதுதான் வழி.

நிபுணிகே.—தக்க காலத்தில் இராவதி விண்ணப்பம் செய்திருப்பதால் இந்த வேண்டுகோள் பயன்படுமென்று அரசருக்காக அரசியே பேசுகின்றாள். "காலே ப்ரயுக்தா கில கார்யவித்பி: விஜ்ஞாபனா பர்த்ருஷு ஸித்திமேதி" என்ற குமாரஸம்பவச் செய்யுள் இங்கு நினைக்கற்பாலது.

பிரபுவே— தனது எண்ணம் ஈடேறிவிட்டபடியால் இனி இங்கு இருக்கவேண்டிய அவசியமில்லை என்று நினைத்துத் தனது தேசத்திற்குப் புறப்பட முயல்கின்றாள் பிக்குணி.

அரசன்—பகவதி, மதிப்புக்குரிய மாதவஸேனனுக்கு நான் எழுதும் பத்திரிகைகளில் தங்களுடைய முகமனுரைகளையும் சேர்த்து விடுகின்றேன்.

பிக்குணி— இவள் உங்களிருவருடைய அன்புக்கும் கட்டுப் பட்டே நிற்பவள்.

அரசி—ஐயனே, இன்னமும் நான் தங்களுக்குச் செய்யவேண்டிய பிரியம் யாது? கட்டளையிடவேண்டும்.

---

பகவதி— தாங்கள் போகவேண்டாம். தாங்கள் மாதவஸேனனைக் கொண்டாடுவதாக நான் என் பத்திரிகையில் எழுதுவதுந்தவிர ஒவ்வொரு பத்திரிகையிலும் தங்களுடைய உபசார மொழிகளை எழுதியனுப்பிவிடுகிறேன். ஆதலின், தாங்கள் சாசுவதமாகவே இங்கு இருக்கவேண்டும என்கிறான் அரசன்.

இவள்— தாழ்மையாக "இவள்" என்று தன்னைக் குறிப்பிடுகின்றாள் பிக்குணி. உண்மையில், வேறு ராஜ்யத்திற்கு வந்திருக்கும் சிறு பெண்ணாகிய மாளவிகைக்கு உற்ற துணையாயிருக்கவே பிக்குணி விரும்புவாளன்றோ.

ஐயனே.—எல்லா நாடகங்களிலும் முடிவில் "கிம் தே பூய: ப்ரியம் உபகரோமி—மேலும் நான் செய்யவேண்டிய பிரியம் என்ன?". என்று கேட்பது வழக்கம். இதனைக் "காவ்ய ஸம்ஹாரம்" என்று நாடக இலக்கண நூல் கூறும். இது பெரும்பாலும் பெரியாரொருவருடைய வாக்கியமாகவே இருக்கும். அந்தப் பெரியாராலேயே நாடக நாயகன் சீரும் சிறப்பும் பெற்றவனாயிருப்பான். இங்கு அரசனைவிட அரசி பெரியாளல்லளாயினும் நாயகனுடைய மனோரதத்தை இவளே நிறைவேற்றி வைப்பதால் இவ்விஷயத்தில் இவளைப் பெரியவளாக்கி நமது கவி இவளைக்கொண்டே இந்தக் கேள்வியைக் கேட்கும்படி செய்கின்றார். மாலதீமாதவத்தில் காமந்தகி என்பாள் துறவறத்திற்குப் பொருந்தாத நிலைமையில் நடந்து முழுப் பொறுப்பையையும் தானே ஏற்றுக்கொண்டிருப்பதால், அவள் அங்கு இந்த வினவை எழுப்புவது ஒருவாறு ஏற்றதாயினும், பட்டும் படாத்துமாக நடந்துவரும் நமது பிக்குணியை இந்தப் பொறுப்பேற்குப்படி விடாத நம் கவிராயர், அவள் மூலம் இந்தப் பிரச்னத்தைக் கிளப்பாதது, பெரிதும் பாராட்டற்பாலது.

*அரசன்*—இதற்கப்புறமும் செய்யவேண்டிய பிரியமொன்று இருக்கின்றதா? ஆயினும் இஃது ஆவதாக—

ஏ தேவி, நீ எப்பொழுதும் என்னிடம் அன்பும் முக மலர்ச்சியுமுள்ளவளாயிருக்க வேண்டும். என் மனத்திலுள்ள வேண்டுகோள் இவ்வளவே.

---

**இதற்கு.**—"*அத: பரமபி ப்ரியமஸ்தி? ததாபி இதமஸ்து பரதவாக்யம்*" என்று நாடகங்களெல்லாவற்றிலும் காணப்படுவதுண்டு. "இதற்கு மேலும் பிரியமுண்டா? ஆயினும் இஃது ஆகுக" என்று கூறிவிட்டு மேலே ஒரு செய்யுள் சொல்லப்படுவது வழக்கம். அந்தச் செய்யுள் சுபப் பிரார்த்தனையாயிருக்கும். இதனை "ப்ரசஸ்தி" என்பர் வடநூலாசிரியர். இங்குப் "பரதவாக்யம்" என்பது கவியின் வாக்கியமாகும். பரதரென்பவர் நாட்டிய சாஸ்திரமியற்றிய முனிவர். அவரை வெகு மதிப்பதற்காகக் கூறும் வாக்கியம் பரதவாக்கியமெனச் சிலர் கூறுகின்றார்கள். பரதன் என்றால் நடன், அதாவது வேஷந் தரித்திருப்பவன்; அவனுடைய வாக்கியம், பரதவாக்கியம். அதாவது—இந்த வாக்கியம், அப்போது சொல்லும் அரசன் முதலியவருடையதன்று; பின்னை, வேஷம் தரித்துள்ள நடனுடையதே. உதாஹரணமாக—இங்கு இந்தச் செய்யுளை அக்கினிமித்திரனது வேஷம்பூண்ட நடன் சொல்கின்றானாயினும், அந்த நடன் இதனை அக்கினிமித்திரனாயிருந்து சொல்பவனல்லன். மற்று, அவன் வெறும் ஒரு நடனாயிருந்தே சொல்பவனாவான். "பரதவாக்கியமாவது நடனுடைய வார்த்தை. நாடகாபினய முடிவில் நடனால் ஸபையோரின் பொருட்டு ஆசி கொடுக்கப்படுகிறது. பிரஸ்தாவனைக்குப் பின்னர் நடவாக்கியமில்லாமையால் இங்குப் பரதவாக்கியம் எனக் கூறப்பட்டது." என்று சாகுந்தள வியாக்கியானத்தில் ராகவபட்டன் எழுதுகின்றான். இங்குள்ள செய்யுளில் முதல் இரு அடிகளும் அக்கினிமித்திரனுடைய வார்த்தைகளே. பின்னுள்ள இரு அடிகளே பரதவாக்கியமெனக் கொள்க.

**ஏ தேவி.**—"பவ தேவி நித்யம்" என்பது பாடம். "சண்டி நித்யம்" என்ற பாடமும் காணப்படுகின்றது. "சண்டி" என்ற சொல்லுக்கு "ஏ கோபமுள்ளவளே" என்பது பொருள். இந்தப் பாடம் இந்த ஸந்தர்ப்பத்திற்கு அவ்வளவு பொருத்தமுடையதன்று. "ஏதாவதேவ ஹ்ருதயே ப்ரதிபாலநீயம்" என்பது காடயவேமன் அங்கீகரித்த பாடம். இதனையே நாமும் தழுவினோம். "ஏதாவதேவ ம்ருகயே ப்ரதிபக்ஷ ஹேதோ:" என்ற பாடமானால் "எதிராளி நிமித்தம் இவ்வளவு தான் நான் தேடவேண்டும்" என்பது பொருள். இங்கு எதிராளியாவது ஸபத்தினியாம். "உனக்கு ஸபத்தினி என்ற எதிராளி உண்

(பரதவாக்கியம்)

அக்கினிமித்திரன் ஆளுகையில், பிரஜைகளால் வேண்டப்படும் ஈதியின்மை முதலிய யாவற்றும் தம்மடைவே ஏற்படாமலிரா.

[எல்லாரும் சென்றனர்.

ஐந்தாம் அங்கம் முற்றிற்று.

மாளவிகாக்கினி மித்திரீய நாடகம் முற்றிற்று.

---

டேயன்றி எனக்கு எதிராளி என்பவன் கிடையாது. நீ ஸபத்தினி விஷயமாக மனங்கலங்காமல் அன்புடன் என்னிடமிருக்கவேண்டு மென்பது தான் நான் வேண்டிக்கொள்ள வேண்டிய விஷயம்." என்கிறான் அரசனெனக் கருத்துக் கொள்க.

அக்கினிமித்திரன்.—இவ்விரு அடிகளே பரதவாக்கியமெனக் காடயவேமனும் எழுதுகின்றான். ஈதியாவது துன்பம். "மழையில்லாமை, அதிகமாக மழை பெய்தல், எலி, வெட்டுக்கிளி, பறவை, அடுத்துள்ள அரசன் ஆகிய இவ்வாறும் ஈதியெனப்படும்" என்று வடநூல் கூறும். இந்த ஈதிபாதை இருக்கக்கூடாதென்று பிரஜைகள் வேண்டுவார்கள். இங்கோ இதனை வேண்ட வேண்டியதில்லை. அறநெறி வழுவாது அக்கினிமித்திரன் ஆட்சி செலுத்துகின்றபடியால் ஈதியின்மை முதலியன பிரஜைகளுக்கு ஸ்வயமாகவே கைகூடுமென்பது கருத்து. இவ்வாறு பேசுவதும், வேண்டுகோளின் ஒருவகையேயாமென அறிக. "ஆசாஸ்ய மத்யதிகமாத்ப்ரப்ருதி ப்ரஜாநாம்" என்ற பாடத்தில் "அக்கினிமித்திரன் பிரஜைகளைக் காப்பாற்ற ஏற்றுக்கொண்ட நாள் முதல்" என்பது பொருள். இது பரதவாக்கிய மெனப்படும் நடனுடைய வார்த்தையாகையால் இங்கு அக்கினிமித்திரனைக் குறித்துப் பேசியிருப்பது குற்றமாகாது. "அக்கினிமித்திரனைப் பற்றிப் பரதவாக்கியத்தில் பேசியிருப்பதால் நம் காளிதாஸர் அக்கினிமித்திரனுடைய காலத்தில் வாழ்ந்தவராவர்" எனச் சிலர் ஊஹிக்கின்றனர். இது நல்ல பொருத்தமுடையதன்று. கதாநாயகனைச் சிறப்பித்துக் கூறியிருப்பதாக மட்டுமே நாம் கொள்ளவேண்டும். அன்றேல் முத்திரா ராக்ஷஸ நாடகத்தின் பரதவாக்கியத்தில் சந்திரகுப்தனைக் கூறியிருக்கும் விசாகதத்த கவி, இவர்களது ஊஹப்பிரகாரம் சந்திரகுப்தனுடைய காலத்தில் வாழ்ந்தவனாகவன்றோ கருதப்படவேண்டும். "மற்றைய நாடகங்களில், எல்லாக் காலங்களுக்கும் பொருந்துமாறு சுபப்பிரார்த்தனை எழுதப்பட்டிருப்பதால் இங்கும் மற்றைய அரசர்களெல்லாருக்கும் பிரதிநிதியாகவே அக்கினிமித்திரன் குறிப்பிடப்பட்டிருக்கின்றான் எனக் கொள்ளல் வேண்டும்" என்பது காடயவேமனின் உரை.



